

# வெற்றி தலைக்கேறி விட்டதா என்ன அவருக்கு?

**ஃபரூக் எஞ்சினியர் புன்னகை புரிகிறார்**

"நான் எதையும் தலைக்கேற விடுவதில்லை. ஆம். புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமைத் தவிர வேறு எதையும் நான் தலைக்கேற விடுவதில்லை. ப்ரில்க்ரீம் என்னுடைய தலைமுடியை ஆரோக்கியமாக, நன்கு படிந்த நிலையில் வைத்திருக்கிறது. எப்படியிருக்க நான் விரும்புகிறேனோ அதுபோலவேதான்."

ப்ரில்க்ரீமில் இருக்கும் புரதம் மயிர்க்கால்களுக்கு வலுவூட்டி, தலைமுடிக்கு நல்ல ஊட்டம் அளிக்கிறது. ப்ரில்க்ரீமினால் கலையாத முடியுடன் மிடுக்காக நீங்கள் நாள் முழுவதும் விளங்கலாம். தவிர பிசுக்குத்தன்மையோ, ஒட்டிக்கொள்ளும் தன்மையோ அதற்குக் கிடையாது. அது முடியலங்காரத்திற்கோர் நவீன வழி.

ஃபரூக் மாதிரியே நீங்களும் புத்திசாலித்தனமானதைச் செய்யுங்கள்.
புரதம் நிறைந்த ப்ரில்க்ரீமை உபயோகியுங்கள்.




புரதம் நிறைந்த
## ப்ரில்க்ரீம்
அழகான முடிக்கு ஆரோக்கியமான வழி.

B/F-3191-TAM-2

# நாட்டில் மிக அதிகமாக விற்பனையாகும் ஒரே பெயிண்ட்

Apcolite
SYNTHETIC ENAMEL



ீட்டை
அலங்கரிக்க
விஷயமறிந்தவர்கள்
விரும்புவது—
ஏஷியன் பெயிண்ட்ஸ்

AIYARS-AAJ 389 TM

# ஃப்யூராடான் உபயோகித்தால் அதிக நெல் விளைச்சல்

**டாடா ஃபைஸன் ராலிஸ் வழங்கும் புதிய ஃப்யூராடான் 3ஜீ குருணைகள் நெற்பயிரைத் தாக்கும் பூச்சிகளைக் கொல்லுகின்றன. இவை பயிர் முழுவதும் பரவி செயலாற்றுவதோடு, அதிக பச்சையான நெல்லைத் தருகின்றன. மற்ற பூச்சிக் கொல்லிகள் தருவதை விட ஹெக்டேருக்கு 3 மெட்ரிக் டன்னுக்கும் அதிகமாக விளைச்சல் தருகின்றன.**

உலகெங்குமுள்ள நெற்பயிர் விளையும் பிரதேசங்களில் மிகச் சிறந்த பூச்சிக் கொல்லி என்று போற்றப்படுகின்றன, ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள். இவை பயிர் முழுவதும் பரவும் கசிவியல்பு கொண்டவை. இவற்றை நிலத்திலும் நெல் வயலிலுள்ள நீரிலும் போட்டால், வேர்கள் மூலம் பயிர்கள் அவற்றை உறிஞ்சி, பயிர் முழுவதும் பரப்புகின்றன. இதனால் இந்தப் பயிரைக் கடித்து மெல்லும், துளைக்கும் மற்றும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகள் கட்டுப்படுத்தப்படுகின்றன.

உங்கள் நெற்பயிருக்கு சிக்கனமான புதிய முறை, அதாவது விதைகளை/ நாற்றுக்களைத் தோய்த்து எடுக்கும் முறைபற்றி உங்கள் வியாபாரியைக் கேளுங்கள். அதை ஒரு முறை கையாண்டு பாருங்கள். வியப்பூட்டும் பலன்களைக் கண்டு நீங்கள் அதிசயிப்பீர்கள்.

வியாபார விபரங்களுக்கு எழுதுக:
**ராலிஸ் இந்தியா லிமிடெட்**
பெஸ்டிஸைட்ஸ் & ஃபெர்டிலைஸர்ஸ் டிவிஷன்,
21, ரேவெலின் ஸ்ட்ரீட்,
பம்பாய் 1.

மற்ற இடங்கள்: சென்னை, கல்கத்தா, லக்னோ

**TATA FISON RALLIS**

**விசேஷ சிறப்பம்சங்கள்:**

ஃப்யூராடான் 3ஜீ குருணைகள் வேறெந்த தானியப் பூச்சிக் கொல்லிகளை விடச் சிறந்தவை; மிகவும் பயனுள்ளவை.

- நெற்பயிரைத் தாக்கும் தண்டு துளைப்பான், தத்துப் பூச்சி, ஆனைக்கொம்பன், கடிக்கும் பேன் ஆகிய பெரும்பாலான பூச்சிகளைக் கட்டுப்படுத்துகின்றன.
- விசேஷ கருவிகளின் உதவியின்றிக் கையாலேயே இந்த மருந்தை எளிதில் பத்திரமாகப் போடலாம்.
- கடித்து மெல்லும் பூச்சிகளையும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளையும் கட்டுப்படுத்துகின்றன.
- பூச்சிகளை விரைவில் கொல்வதோடு பயிர் முழுதும் உடனடியாகப் பரவி விடுகின்றன.
- இக் குருணைகளை மழை அடித்துச்செல்ல முடியாது. தெளிப்பு மருந்துகளைவிட நீண்ட காலம் பாதுகாப்புத் தருகின்றன.
- தானிய மணியில் மருந்து தங்கியோ கழிவாகவோ செய்யாது.
- இவை பயிரை அழிக்கும் பூச்சிகளை மட்டுமே பாதிக்கும்; பயிருக்கு உதவியான பூச்சிகளுக்குத் தீங்கு செய்யாது.




**அதிக நெல் விளைச்சல் பெற...ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள்**

OBM-0275 TAM

# அக்கோசிட்

## ஏசிசி யின் அமில எதிர்ப்பு சிமெண்ட்

அமிலங்கள் மற்றும் அரிக்கும் இரசாயனங்களிலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது.




அக்கோசிட்—அமில எதிர்ப்பு செங்கற்கள், ஓடுகள் அல்லது அமில சேமிப்புத் தொட்டிகள் மற்றும் பிக்லிங் தொட்டிகள் கட்டுவதற்கான அமில எதிர்ப்பு இயற்கை படிவங்கள், கிரியைத் தொட்டிகள், அமில கூண்டுகள், புகை போக்கிகள், அமில எதிர்ப்பு தொழிற்சாலை தரை வரிசைகள், ஆராய்ச்சிக்கூட மேஜை மேல் தளங்கள், இரசாயன தொழிற்சாலைகள், துணி உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஆகியவற்றில் இணைப்பு வேலைகளுக்கு சிபாரிசு செய்யப்படுகிறது.

ஹைட்ரோப்ளோரிக் அமிலம் தவிர்த்து இதர சக்தி வாய்ந்த எல்லா அமிலங்களுக்கும் மிகச் சிறப்பான எதிர்ப்புத் தன்மையும், அதிக இறுகும் தன்மையும் கொண்ட ஏசிசி யின் ஒப்புயர்வற்ற அமில பாதுகாப்பு சிமெண்ட் 'அக்கோசிட்' பவுடர் கலவைகளைத் திரவமாக வரும் அக்கோசிட் இரசாயன தொழிற்சாலைகள் மற்றும் அவை சார்பான கட்டடங்களுக்கு மிகவும் ஏற்றது.

ஏசிசி
தரமான
தயாரிப்புகளுக்கு
கம்பெனியின்
உத்தரவாதம்

தயாராக கிடைக்கும் இடம்:
தி சிமெண்ட் மார்க்கெட்டிங் டிவிஷன் ஆஃப்
தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனிஸ் லிட்.
அல்லது அவர்களுடைய விநியோகஸ்தர்கள்.

தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனிஸ் லிட்.

mca. ACC. 264 TAM

# உயிர்நூல் பாடம் சலிப்பூட்டுகிறது

அதற்குப் பதிலாக, நாள் முழுதும் உழைத்த பின்னரும், இவர் முகம் எப்படி இத்தனை புதுமையோடு எழிலோடு விளங்குகிறது என்பதை கற்பித்தால் நலம்!



**காலை முதல் இரவு வரை புதுமையுடன் தோற்றமளிப்பது எப்படி?**
பகல் தொடங்கியதும், லக்மே முகப் பவுடர் தடவுங்கள். நாள் முழுவதும் உங்கள் முகம் எழிலோங்கி விளங்க, லக்மே காம்பாக்ட் மேக்-அப் செய்து கொள்ளுங்கள். இது உங்கள் கைப்பையில் அடங்கக் கூடியது.

**பவுடர் பூசியதுபோன்ற தோற்றத்தைத் தவிர்ப்பது எப்படி?**
மிகவும் மென்மையான, ஒளி ஊடுருவிப் பாயும் முகப்பவுடரைத் தேர்ந்தெடுங்கள். லக்மே அல்ட்ரா-சில்க் பேஸ் பவுடர் விசேஷமாகப் பட்டுபோல சலிக்கப்பட்டுள்ளது. இதனால் அது மேனி வண்ணத்துடன் இணைந்து, புதுமைப்பொலிவைக் கூட்டுகிறது.

**இதர பெண்மணியைப் போல அதே வண்ணச் சாயலை உபயோகிப்பது சாமர்த்தியமல்ல. ஏன்?**
உங்கள் மேனி வண்ணத்தைவிட இலேசான அல்லது கருமையான சாயலில் பவுடர் தடவினால், திட்டுத் திட்டாக இருக்கும். எனவே இந்தியப் பெண்மணிகளின் பல்வேறு மேனி வண்ணங்களுக்குப் பொருந்தும்படியாக 8 சாயல்களில் கிடைக்கிறது லக்மே முகப் பவுடர். உங்களுக்கு எது பொருத்தமோ அதைத் தேர்ந்தெடுங்கள் — லக்மே காம்பாக்ட் மேக்-அப் பொருத்தமான 8 சாயல்களில் கிடைக்கிறது.

**சரியாக மேக்-அப் செய்து கொள்ளும் கலையைக் கற்போருக்குப் பாராட்டுகள்:**
முதலில் ஒரு நல்ல வேனிஷிங் க்ரீம் அல்லது லிக்விட் மேக்அப் உபயோகியுங்கள். பிறகு சுத்தமான பஞ்சால் உங்கள் முகம் மற்றும் கழுத்துப் பகுதியில் பவுடரை மெதுவாக அழுத்துங்கள். மூக்கு, நெற்றி, முகவாய்க்கட்டை போன்ற எண்ணெய்ப்பசையுள்ள பகுதிகளிலும் அவ்வாறே செய்யவும். அங்கெல்லாம் லக்மே முகப் பவுடர் மணிக்கணக்கில் நன்றாக ஒட்டிக்கொள்ளும். நீங்கள் இயற்கைப் பொலிவுடன் இணையற்ற தோற்றமளிப்பீர்கள்.

# லக்மே அல்ட்ரா-சில்க்

## பேஸ் பவுடர் மற்றும் காம்பாக்ட் மேக்-அப்

எழிலோங்கும் 8 சாயல்களில் —மணிக்கணக்கில் மேனியழகு மிளிர.





# வாழ்க்கை உணர்ச்சி மயமானது

## 'க்ளிக்' அடித்துவைப்பீர்...நிரந்தரம்

எப்போதுமே உங்கள் கையோடிருக்கட்டும் தப்பாத் துணையான க்ளிக் III.
மறைந்தோடும் வாழ்வின் மணியான கணங்களை நிரந்தரமாக்கிக் காப்பீர்—
நினைவுமுகம் கண்முன் நிற்பதற்கே.

'இலக்கு வைத்ததும் சடக்' என எடுக்கவே ஆக்பா க்ளிக். காரியத் தகுதி வாய்ந்தது. உண்மை தவறாதது. கையாள எளிது. சிக்கனமிக்கது.

- 120 பிலிம் ரோல் ஒவ்வொன்றுக்கும் பெரிது பெரிதாக (6 x 6 செமீ.) படங்களைப் பெறுவீர்கள்.
- சிறப்பானதோர் தவார்த் தோலுறை, போர்ட்ரெய்ட் லென்ஸ், ஃப்ளாஷ்கன் ஆகியவை மேற்கொண்டு தனிவிலைக்குக் கிடைக்கும்.

தெள்ளத் தெளிவான பிரிண்டுகளுக்கும்,
என்லார்ஜ்மெண்டுகளுக்கும் கண்டிப்புடன் கோருவீர்
ஆக்பா-கேவார்ட் போட்டோத் தாள்களை.

அனுமதிபெற்ற எல்லா ஆக்பா-கேவார்ட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

ஆக்பா-கேவார்ட் AG லிவர்குஸன் அவர்களின் கூட்டுறவோடு
இயற்றைத் தயாரிப்போர்: தி நியூ இந்தியா இண்டஸ்ட்ரீஸ் லிட்.

விலை
ரூ. 56.25
(எக்ஸைஸ் தீர்வை உள்ளிட்டது. இதர வரிகள் தனி).





ஏகபோக விநியோகஸ்தர்கள்:
**ஆக்பா-கேவார்ட் இந்தியா லிமிடெட்**
பம்பாய் • நியூ டெல்லி • கல்கத்தா • சென்னை

இ புகைப்பட சாதனங்களின் தயாரிப்பாளர்களான
ஆக்பா-கேவார்ட், ஆன்ட்வெர்ப்/லிவர்குஸன்
ஆகியோரின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்.



ஆக்பா க்ளிக்—
இந்தியாவின் உண்மைப்
புகழ்பெற்ற காமிரா.

Simoes/AG/18C Tam

பருத்தியிலே விளைந்திடும் கற்பனைகள் அற்புதமோ அதி அற்புத

# டிசைன்கள்



நேர்த்தியான மதிப்பு ....நறுவிசான பொலிவு ...
நல்லழகு ...
இயற்கைச் சிறப்பிலே இணையற்றது பருத்தி



**செஞ்சுரி**– 100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு. மான்பு. கம். லிமிடெட், பம்பாய்-400 025

ADROIT-CM-533 P-

புதிது - :பாஸ்:போமின் தயாரிப்பாளர்கள் அளிக்கும்

# :பாஸ்:போமின் அயன்

## ...ஏனெனில், பெண்களுக்கு அயன் அதிகம் தேவை

பெண்களுக்கு அயன் அதிகம் தேவை. ஏனெனில் மாதாமாதம் அவர்களுக்கு அயன் இழப்பு ஏற்படுகிறது. உயிர்ச்சத்தான அயன் இட்டு நிரப்பப்பட வேண்டும்.

பெண் கருவுற்றிருக்கும் போதும், தன் குழந்தைக்குப் பாலூட்டும் காலத்திலும் அவளுக்கு அதிக அயன் சத்து தேவைப்படுகிறது. ஏனெனில் [redacted]





# எழிலரசி-
# ராய்ப்பூர்
# இளவரசி
# யாரோ?

'மிஸ் ஏஷியா 1973'

'மிஸ் ஏஷியா 1973'



ராய்ப்பூர் மில்ஸ்



லால்பாய் குரூப்
துணிகள்

CMLB.30.162 8 TM

விற்பனை ஏஜெண்டுகள்: M/S. ஏ. ஜே. எஸ். படேல் அண்ட் கம்பெனி, 5, கிடங்குத் தெரு, சென்னை-1; 76, கிழக்கு மாரட் தெரு, மதுரை. அதிகாரம் பெற்ற சில்லறை விற்பனையாளர்கள்: M/S. வெங்கடேஷ் 234, 244, என். எஸ். ஸி. போஸ் ரோடு, சென்னை-1. M/S. சல்வரீஸ், 26-பி, மேல கோபுரத் தெரு, மதுரை. M/S. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.

## பொருளடக்கம்

**பிரமாதீச, புரட்டாசி 21 — அக். 7, 1973**



மேலட்டை :

**வெளிநாட்டவரும் வணங்கும் வாணியின் வீணை**

வண்ணப்படம் : **புஷ்பத்துறை சுப்பிரமணியம்**




''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# பிஜ் உபயோகித்து எப்படியெல்லாம் சேமிக்கலாம் பாருங்கள்!

## சேமிப்பு

முதலில், மிகவும் பயனுள்ள சூப்பர் டிடர்ஜென்ட் கொண்ட பவுடர் வாங்குவீர். அதுவும், மிகவும் வசதியான, மீண்டும் பயன்படும் பிளாஸ்டிக் பேக்கில். ஒரு பைசா கூட அதிகம் தரவேண்டாம்.

## சேமிப்பு

5-கி.கி.யில் பேக்கிலிருந்து நீங்கள் ஒவ்வொரு முறை நிரப்பும்போதும், 80 பைசா சேமியுங்கள். இவ்வாறு 5 முறை நிரப்புகையில் மொத்தம் ரூ. 4.00 மிச்சம்.

## சேமிப்பு

2-கி.கி.யில் பேக்கிலிருந்து நீங்கள் ஒவ்வொரு முறை நிரப்பும்போதும், 55 பைசா சேமியுங்கள். இவ்வாறு 2 முறை நிரப்புகையில் மொத்தம் ரூ.1.10 மிச்சம்.




சேமிப்புக்கு சேமிப்பு; கூடவே, உங்கள் சமையல் மற்றும் கண்ணாடிப் பாத்திரங்கள், தரை மற்றும் குளியலறை தந்திடும் கண்ணைப் பறிக்கும் பளபளப்பு!

பிஜ்: நுரை கொழிக்கும், சட்டெனத் துலக்கும் சூப்பர் டிடர்ஜென்ட். தனிச் சிறப்புள்ள, பல-பயன்கொண்ட துலக்கும் பவுடர்.

**பிஜ் —**

**கோத்ரெஜ் தயாரிப்பு**

CMGS-50-202 TM

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா , --பாரதியார்



மலர் 33 :: இதழ் 10

# ஆந்திரப் பிரச்னைக்கு ஆறு அம்ச திட்டம்

ஆந்திரா — தெலிங்கானுப் பிரச்னைக்கு முடிவு காண மிகுந்த பிரயாசையுடனும் விடாமுயற்சியுடனும் நீண்ட காலப் பேச்சு வார்த்தைகளுக்குப் பின் உருவாக்கப்பட்ட ஆறு அம்சத் திட்டத்தைத் துருவித் துருவிப் பார்த்துக் குறை காண முற்படுவது விரும்பத் தக்கதல்ல. அமைதி குலைந்து, நேச மனப்பான்மை வேகமாக மறைந்து, மாநிலத்தை இரண்டாகத் துண்டாடத்தான் வேண்டும் என்ற அளவுக்கு மக்களிடையே கசப்பு தோன்றியுள்ள நிலைமையில் சமரச மனப்பான்மையுடன் உருவாக்கப்பட்ட எந்த சமாதானத் திட்டத்தையும் வரவேற்பதுதான் விவேகமாகும். ஆறு அம்சத் திட்டம் மத்திய அரசின் முன்னிலையில் வகுக்கப்பட்டதென்றாலும், மாநிலத்தில் பெரும்பான்மையினர் உடனடியாக ஏற்றுக்கொள்ளக் கூடிய வகையில் உருவாக்கப்பட்டுள்ளது.

ஆந்திரப் பிரதேசத்தை எப்படியும் இணைத்தே வைத்திருக்க வேண்டும், பிரிக்கக் கூடாது என்ற அடிப்படையில் இந்தத் திட்டம் வகுக்கப்பட்டிருப்பது போற்றத் தக்கது. நாட்டில் பிரிவினைச் சக்திகள் மேலோங்கி, ஒற்றுமையைக் குலைக்க முற்பட்டுள்ள நிலைமையில், இச்சக்திகளுக்கு இடம் கொடாமல், ஆந்திரா மாநிலத்தின் ஒற்றுமையைக் காக்கத் திட்டம் போட்டிருப்பது ஆந்திரப் பிரதேசத்துக்கு மட்டுமல்ல, நாடு முழுவதற்குமே நல்லது.

விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையுடன் ஆந்திரா — தெலிங்கானுப் பிரதிநிதிகளும் நடந்து கொண்டிருப்பது போற்றத் தக்கதுதான். உயர் மட்ட உத்தியோகங்களுக்கு ''முல்கி'' விதிகளைக் கைவிடவும், பின்தங்கிய தெலிங்கானுப் பகுதியின் அபிவிருத்திக்குத் தனியாகப் பிராந்தியக் கமிட்டியை நியமிக்கவும், முன்னேற்றத்துக்கு நிதி வசதிகள் தாராளமாக வழங்கவும் வகை செய்திருப்பது ஆந்திரப் பிரிவினைக் கோஷ்டியினருக்குத் திருப்தி அளிக்கக்கூடியது. இத்திட்டங்கள் கருத்தளவில் போற்றத் தக்கவைதான் என்றாலும், செயல்முறையில் சிக்கல்கள் சாதாரணமாகத் தோன்றக் கூடும். ஆனால் திட்டத்தை உருவாக்குவதில் காட்டப்பட்ட சமரச மனப்பான்மை நீடித்தால், சில்லறை அம்சங்களில் ஏற்படக் கூடிய தகராறுகளைச் சுலபமாகவே சமாளித்து விடலாம்.

புதிய மத்திய சர்வகலாசாலை ஒன்றை ஏற்படுத்த வேண்டும் என்றும் இத்திட்டம் கூறுகிறது. இதுவும்கூடப் பிரிவினைச் சக்திகளைச் சமாதானப்படுத்தக் காட்டும் சலுகை எனக் கருதலாம். படித்தவர்களிடையே நிலவும் வேலையில்லாத் திண்டாட்டத்தை உத்தேசித்து பொதுவாகவே ஐந்தாண்டுத் திட்டத்தில் புதிய சர்வ கலாசாலை அவசியமில்லை என்று முடிவு செய்யப்பட்டிருந்த போதிலும், ஆந்திர மாநிலத்தில் மட்டும் புதிய சர்வ கலாசாலை அமைக்க முடிவெடுத்திருப்பதை இங்குள்ள அசாதாரண நிலைமையைக் கருதி விதி விலக்காகக் கொள்ளலாம்.

ஆறு அம்சத் திட்டத்தில் பிரதானமானது வேலை வாய்ப்புக் குறித்துப் பிராந்திய மக்களுக்கு அளிக்கப்பட்டுள்ள சலுகை. கல்லூரிகளில் இடம் பெறுதல், கீழ் அந்தஸ்து உத்தியோகங்களைப் பெறுதல் ஆகியவற்றைப் பொறுத்தவரை ஸ்தல, மாவட்ட, பிராந்திய மட்டங்களில் அந்தந்தப் பிரதேச அபேட்சகர்களுக்கு வாய்ப்புகள் அளிக்கவும், 'முல்கி' விதிகள் முன்னர் அளித்த பாதுகாப்புக்களை ஓரளவுக்குத் திட்டத்தில் வைத்துக் கொள்ளவும் வகை செய்யப்பட்டிருக்கிறது. இவை தெலிங்கானுப் பிரதிநிதிகளுக்குத் திருப்தி அளிக்கக்கூடியவை. இவற்றிலும் நடைமுறையில் சில சிக்கல்கள் ஏற்படக் கூடும். எனினும் ஒற்றுமை மனப்பான்மை நிலவினால் இவை சமாளிக்க முடியாதவை அல்ல.

இந்த ஆறு அம்சத் திட்டத்தை ஆந்திரா, தெலுங்கானு இரு பகுதி மக்களுக்கு விளக்கி அவர்களுடைய பெருவாரியான ஆதரவைப் பெற்றுக் கொள்வது நல்லது. முன்னெச்சரிக்கையாக இதை அறிந்துகொண்டு, பின்னர் இத் திட்டத்துக்கு அரசியல் சட்டத் திருத்தம் மூலம் உருவகம் கொடுத்தால், மக்களிடையே சச்சரவுகள் வராமல் பாதுகாக்கலாம்.

# பழைய காங்கிரஸ் கூறும் உண்மைகள்

பழைய காங்கிரஸ் செயற் கமிட்டியின் இரண்டு தீர்மானங்கள் இப்போதுள்ள நாட்டின் நிலைமையில் முக்கியத்துவம் வாய்ந்தவை. ஏனெனில் சில அடிப்படையான உண்மைகளை அவை எடுத்துச் சொல்லுகின்றன.

''நிர்வாகம் படிப்படியாகத் திறமைக் குறைவாகவும், ஊழல் மலிந்ததாகவும் ஆகின்றபோது மக்கள் நம்பிக்கை இழந்து சோர்வு அடைகிறார்கள். அத்தகைய நிலைமை இப்போது நாட்டில் ஏற்பட்டுள்ளது.

''இத்தகைய ஊழல் மலிந்த ஆட்சியாளர்கள் சோஷலிஸத்தைக் கலப்படம் தான் செய்வார்கள்.

''சோஷலிஸம் என்றால் என்ன என்பது பற்றி யாரும் இதுவரையில் தெளிவாக விளக்கம் கொடுத்ததில்லை. சோஷலிஸம் என்ற பெயரை மட்டும் வைத்துக் கொண்டு அவரவர்கள் இஷ்டப்படி கொள்கைகளையும் கோட்பாடுகளையும் வகுத்துக் கொண்டு, நாட்டில் மக்களிடையே கலவரத்தைத்தான் உண்டாக்குகின்றனர். சோஷலிஸத்தைக் கொண்டு நாட்டில் முன்னேற்றத்தை உண்டாக்க முடியாது.''

இவற்றில் பொதிந்துள்ள உண்மைகளை யாரும் மறுக்க மாட்டார்கள். நாட்டில் ஏற்பட்டுள்ள பொருளாதாரத் தேக்கத்துக்கும், விலை ஏற்றங்களுக்கும் அரசாங்கத்தின் தவறான கொள்கைகள்தாம் காரணம் என்பதையும் எல்லோருமே ஒப்புக்கொள்ளுவார்கள்.

பழைய காங்கிரஸ் தலைவர்களில் பலர் பழம் பெரும் தேசபக்தர்கள். அவர்கள் பதவியில் இல்லாது போனாலும் மக்களிடம் இருந்த செல்வாக்கு குறைந்து விடவில்லை. தற்போதைய நிலைமையில் அவர்கள் முனைந்து செயலில் இறங்கினால், அவர்களுக்கு மக்களின் ஆதரவு மேலும் பெருகும். மக்களிடையே பரவலாக நிலவுகின்ற ஏமாற்ற உணர்ச்சியும், அதிருப்தியுமே, பழைய காங்கிரஸ் தலைவர்களுக்குச் சாதகமான சூழ்நிலை. மத்திய அரசின் தவறான பொருளாதாரக் கொள்கைகளை எதிர்க்கப் பழைய காங்கிரஸ் தலைவர்களின் கூட்டு முயற்சியும் தமிழகத்தில் பிரிவினைச் சக்திகளுடன் போராடத் தனிப்பெருந் தலைவர் காமராஜின் தீவிர முயற்சியும் இன்று பாரதத்துக்கும் தமிழகத்துக்கும் இன்றியமையாதவை.

தேசத் தந்தை காந்திஜியின் கோட்பாடுகளையும், கருத்துக்களையும் நாட்டில் அரசாங்கத்தினர் உட்பட எல்லோருமே வேகமாக மறந்துகொண்டு வரும் சூழ்நிலையில் காந்திஜியின் முக்கியமான சில கருத்துக்களைப் பழைய காங்கிரஸின் தீர்மானங்கள் பிரதிபலிக்கின்றன என்பது திருப்தி தருகிறது. பொது வாழ்வு ஊழல் இல்லாமல் நேர்மையுடன் இருத்தல் வேண்டும் என்று அவர் கூறிய ஒரு கருத்தை அரசாங்கத்திலுள்ளவர்களும் அரசியல் கட்சியினரும் கடைப்பிடிக்க உறுதி கொண்டால்கூட நாடு முன்னேற்றமடையும்.

# தமிழ் நாட்டிலே...

தீரன்

## திறந்த மின்சாரக் கம்பங்கள்

சென்னை நகரத்தின் தெருக்களிலும், பொது இடங்களிலுமாகக் கம்பங்களிலும், பிளாட்பாரங்களிலும் மின்சார ஃப்யூஸ் பெட்டிகள் திறந்தே கிடப்பதன் காரணமாகப் பொதுமக்களுக்கு அபாயம் அதிகமாகியுள்ளது. பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளும், குழாய்க்குத் தண்ணீர் பிடிக்க வரும் தாய்மார்களும், பாதசாரிகளும் மின்சார விபத்துக்குள்ளாகும்படி பல ஆயிரக் கணக்கான மின்சாரக் கம்பங்கள் இப்படித் திறந்த ஃப்யூஸ் பெட்டிகளுடன் இருப்பதாகத் தெரிகிறது. சுமார் 30,000 கம்பங்களில் 6,000 கம்பங்கள்வரை மூடப்படாத ஃப்யூஸ் பெட்டிகளுடன் இருப்பதாக மாநகராட்சி ஆணையாளருக்கே புள்ளி விவரங்கள் தெரிந்திருக்கின்றன.

திறந்த ஃப்யூஸ் பெட்டியிலிருந்த மின்சாரக் கம்பி மூலம் சில நாட்களுக்கு முன் சைதாப்பேட்டைத் தெரு ஒன்றில் பரிதாபகரமான மரணம் சம்பவித்திருக்கிறது. எதிரே முட்ட வந்த மாட்டுக்காக வழி விலகி மின்சாரக் கம்பத்தின் ஓரமாகச் சாய்ந்து நிற்கப் போன பட்டம்மாள் என்ற 57 வயதுப் பெண் திறந்த ஃப்யூஸ் பெட்டி மூலம் மின்சாரம் பாயப் பெற்று அப்போதே அந்த இடத்திலேயே நிலைகுலைந்து விழுந்து இறந்து போய் விட்டாள்.

விஷமிகள் ஃப்யூஸ் பெட்டிகளைக் கழற்றித் திறந்து போட முடியாமல் 10 அடி 15 அடி உயரத்தில் பத்திரமாக அவற்றை அமைக்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருப்பதாகச் சென்னை மாநகராட்சி ஆணையாளர் பத்திரிகைகளுக்குத் தெரிவித்திருக்கிறார். திறந்த மின்சார ஃப்யூஸ் பெட்டிகளால் உயிர்ப் பலி ஆகுமளவு நகர வீதிகளை அபாயம் நிறைந்தவை ஆக்கிவிடக் கூடாது.

## பெண்களும் சமையலும்

அகில இந்திய ஓட்டல் மற்றும் சிற்றுண்டிச்சாலைகளின் உரிமையாளர்கள் மகாநாட்டைத் தொடங்கி வைத்துப் பேசும்போது சென்னையில் ராஷ்டிரபதி திரு வி. வி. கிரி அவர்கள் பெண்களையும் அவர்கள் சமையல் வேலைகளில் ஈடுபடுவதையும் பற்றிச் சில கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார். அடுப்படி வேலைகள், சமையல் எல்லாம் நமது பெண்கள் மேல் திணிக்கப்பட்டவை என்ற கருத்தில், ''பெண்களுக்கு அடுப்படியிலிருந்து விடுதலை வாங்கித் தர வேண்டும்.

மீண்டும் மின்வெட்டு!
உற்பத்தி வெட்டு!
கூலி வெட்டு!
சோறு வெட்டு!

வயிற்றைக் கட்டு!

புள்ளை
அழுதா
வாயைக் கட்டு!

மக்கள்

முதல்வர்

மாதவன்

புதுசா ஃபிரேம்
போட்டுத்
துடைச்சு
மாட்டிட்டேன்
ஸார்!

அச்சா! பயன்படுத்தாம
லேயே இருந்து செல்ல-
-ரிச்சுப் போன அந்தப்
புத்தகங்களைக் குப்பையிலே
எறிந்துவிடு!

காந்தியம்

காந்தி ஜெயந்தி - ௧௯௭௩

குடும்ப வருமானத்துக்கு உதவும் வேறு தொழில்களை அவர்களுக்கு ஏற்படுத்தித் தரத் திட்டம் வகுக்க வேண்டும். அவர்கள் அடுப்படியிலே நேரத்தை வீணாக்கிவிடாமல் இருக்க, வீட்டுக்குத் தேவையான உணவுப் பண்டங்களை ஓட்டல்கள் சப்ளை செய்து விட வழி செய்யலாம். வீட்டுக்குள் சில பெண்கள் ஒன்றாகச் சேர்ந்து வாழ்ந்தால் அதனால் சண்டை சச்சரவுகள்தான் மீதமாகும். சங்கடம் மிகுந்த சமையல் வேலைத் தொல்லைகளில் இருந்து பெண்களை மீட்டு, அவர்களுக்குக் கோழி வளர்ப்பு, ஆடு மாடு வளர்ப்பு, தேனீ வளர்ப்பு, ராட்டை நூற்றல் போன்ற வேலைகளைச் செய்ய வாய்ப்பளித்துக் குடும்ப வருமானத்தைப் பெருக்க வேண்டும்'' என்று அவர் கூறியுள்ளார்.

ஓய்வு நேரத்தில் குடும்பத் தலைவியர் பயனுள்ள சிறு தொழில்களில் ஈடுபட்டுக் குடும்ப வருவாயைப் பெருக்கிக் கொள்ளலாம் என்பது புதிய யோசனை அல்ல என்றாலும் ராஷ்டிரபதியின் அறிவுரை வரவேற்கத் தக்கதே. ஆனால் பெண்களுக்கு அடுப்படியிலிருந்து விடுதலை, அது, இது என்றெல்லாம் பேசுவதைப் பெண்மணிகளே வரவேற்பார்களா என்பது சந்தேகம். இந்தியப் பெண் என்பவள் இருதலைட்சுமியாகத் தன்னை நினைப்பவள். குடும்பத்தில் கணவனுக்கும், குழந்தைகளுக்கும் சுவையான உணவு தயாரித்து அளிப்பதன் மூலம் தன்னை வீட்டின் அன்னபூரணியாக உயர்த்திக் கொண்டவள். இந்த ஸ்தானங்களை அடைவதை விடப் பாரதப் பெண்ணுக்கு இன்னும் அதிகமான பெருமை வேறு எதனால் வர முடியும்?

## உபரி நிதிகளில் நூல்களை வெளியிடுக

சமீபத்தில் சென்னையில் கூடிய இந்து தேவாலயப் பாதுகாப்பு — மாநிலச் செயற்குழு தமிழ்நாடு அரசாங்கத்துக்குச் சில உருப்படியான யோசனைகளைத் தெரிவித்திருக்கிறது. 'இந்து ஆலயங்களின் உபரி நிதியைக் கொண்டு பக்தி நூலாகிய தேவார திவ்யப் பிரபந்தங்களையும், இராமாயணம், பாரதம் போன்ற இதிகாசங்களையும், சித்தாந்த, சாஸ்திர வேத ஆகமங்களையும் மலிவு விலையில் அச்சிட்டு வழங்கலாம்; பக்திமான்கள், ஆழ்வார்கள், நாயன்மார்களின் வரலாறுகளைச் சிறு சிறு புத்தக வடிவில் வெளியிடலாம்' என்று இக்குழு இந்து அறநிலையப் பாதுகாப்புத் துறையினரைக் கோருகிறது. 'அநுபவம், ஞானம், பயிற்சி ஆகியவற்றைப் பொருட்படுத்தாமல், 'திடுதிப்'பென்று அர்ச்சகர்கள், ஓதுவார்கள் அத்தியாபகர்களை 60 வயதானால் வேலையிலிருந்து நீக்குவோம்'— என்று அரசு அறிவித்திருப்பது பொருத்தமில்லை என்றும் மற்ற உத்தியோகங்களுக்கு உள்ள நடைமுறை இதற்குப் பொருந்தாது என்றும் அந்த உத்தரவை வாபஸ் பெற வேண்டும் என்றும் இந்தக் குழுவினர் அரசாங்கத்தை வேண்டியிருக்கிறார்கள். இதன்மூலம் திறமையும், ஆகம சாஸ்திர ஞான அறிவும் உள்ள முதியவர்களை இழந்துவிட நேரும் அபாயத்தையும் ஆலயப் பாதுகாப்புக் குழுவினர் அரசாங்கத்துக்குச் சுட்டிக் காட்டியிருக்கின்றனர். பயிரிடும் விவசாயிகளே நிலங்களை உரிமையாக்கிக் கொள்ள இடம் அளிக்கும் சட்டத்திலிருந்து கோவில்கள், அறநிலையங்கள், ஆதீனங்கள் ஆகியவற்றுக்குச் சொந்தமான நிலங்களுக்கு விலக்கு அளிக்க வேண்டும் என்றும் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டிருக்கிறது இக்குழு.

காஞ்சிபுரம் தேவராஜ சுவாமி கோவில் நிதியிலிருந்து முதல் அமைச்சரின் பிச்சைக்காரர் நிதிக்கு ஆயிரம் ரூபாயும், பச்சையப்பன் பெண்கள் கல்லூரிக்கு ஆயிரம் ரூபாயும் தந்துவிட்டுக் கோவிலின் அன்றாட உபயோகங்களுக்குப் பூ வாங்கவும் பண வசதி இல்லாமற் போய்ப் பொதுமக்களையே பூக்கள் கொண்டு வருமாறு கோரவேண்டிய நிலை ஏற்பட்டது என்று அறியும்போது கோயில் உபரி நிதிகள் கோவில்களுக்கே பயன்படுத்தப்பட வேண்டும் என்பதன் நியாயம் புரிகிறது.

## திடீர் வேலைநீக்கம்

சுப்ரீம் கோர்ட்டில் நடந்த ராயப்பா வழக்கில் ராயப்பாவின் வக்கீல் ஏ. கே. சென்னுக்குத் துணையாக இருந்த சென்னை வழக்கறிஞரும் சட்டக் கல்லூரி விரிவுரையாளரு

### ராஜாஜி சிந்தனை

ஒரு தோட்டம் முழுவதும் ஒரே விதமான பூக்கள் இருந்தால் அதை உங்களால் ரசித்துப் பாராட்ட முடியும் என்று நான் நம்பவில்லை. இந்தியாவில் பலவிதமான மொழிகள் உள்ளன. சிறந்த தோட்டக்காரர்களாக நடந்து கொள்வது எப்படி என்பது மட்டும் நமக்குத் தெரிந்திருந்தால் இதை மிகவும் அழகுள்ளதாகச் செய்ய முடியும். குறிப்பிட்ட ஒருவகைச் செடியை மட்டுமே கவனிக்கும் தோட்டக்காரன் நாளடைவில் வெறிபிடித்தவனாகிவிடக் கூடும். 'புற்களை வளர்ப்பதுதான் முக்கியம். மரங்களையும் மலர்ச் செடிகளையும் வெட்டி எறிந்துவிடலாம்' என்று மாட்டிடையன் சொல்லக் கூடும். 'புற்களுக்குப் பதிலாக இலைகளுடன் கூடிய செடிகள் இருந்தால் நல்லது' என்று ஆட்டிடையன் சொல்லக் கூடும். தாவர நூலறிஞரைக் கேட்டால் வெளி நாட்டிலிருந்து செடிகளைக் கொண்டு வந்து இங்கு வளர்க்க வேண்டும் என்பார். தோட்டத்தை அழகுள்ளதாகச் செய்ய எவ்வளவோ விஷயங்களைக் கவனிப்பது அவசியம்.


என்னதான் முயற்சி பண்ணினாலும் சேரவே மாட்டேங்குதே!
பக்தவத்சலம்
இந்திரா காங்கிரஸ்
ஸ்தாபன காங்கிரஸ்


எழுதிக்குங்க, தனிப்பட்ட முறையில் அரசாங்க மருத்துவர்கள் தொழில் நடத்துவதற்கு அரசு தடை விதிக்கும்னு நான் நேற்று கூறியது... என் சொந்த கருத்து!
அன்பழகன்
நிருபர்

மான திரு வி. செல்வராஜைத் தமிழ்நாடு அரசாங்கம் திடீரென்று வேலையிலிருந்து நீக்கி உத்தரவிட்டுவிட்டது. ராயப்பாவின் சார்பில் தமிழக அரசின் ரிக்கார்டுகளையும், தஸ்தாவேஜுகளையும் பரிசோதனை செய்தவர் இவர்தான். சட்டக் கல்லூரியில் தகுதியில்லாதவர்களை ஆசிரியர்களாக நியமிப்பதை எதிர்த்து 1971ம் ஆண்டிலேயே உயர் நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்து வெற்றியும் பெற்றிருக்கிறார் இவர். எம். எல். பட்டப் படிப்பில் சிறப்பான தேர்ச்சி பெற்றவரும், தகுதி வாய்ந்தவரும், சட்டப் படிப்புத் தேர்ச்சிக்காகத் தங்கப் பதக்கம் பெற்றவரும் ஆகிய இவரை ராயப்பா வழக்கு முடிந்து எந்தத் தீர்ப்பும் கூறப்படாமல் இருக்கும் நிலையில் எவ்விதக் காரணமும் காட்டாமல் செப்டம்பர் 21ந் தேதி முதல் வேலையிலிருந்து நீக்கியிருப்பதாகத் தெரிகிறது. இதன் காரணமாகச் சட்டக் கல்லூரி மாணவர்கள் பேரவை கூடி, ''ஒரு வார காலத்துக்குள் மீண்டும் திரு செல்வராஜை வேலையில் அமர்த்தாவிட்டால் அக்டோபர் முதல் தேதியிலிருந்து காலவரையறையின்றி வேலைநிறுத்தம் செய்யப் போவதாக'' நிர்வாகத்தை எச்சரித்திருக்கிறது.. மாணவர் பேரவையின் எல்லாச் சார்புள்ள மாணவர்களும் பேரவையின் இந்த முடிவை ஆதரிப்பதாகத் தெரிவித்திருக்கிறார்கள். வேலைநீக்கம் செய்யப்பட்ட வழக்கறிஞர் சுப்ரீம் கோர்ட்டில் 'ரிட்' தாக்கல் செய்யச் சென்றிருப்பதாகக் கூறப்படுகிறது.

## இரயில் சாப்பாடு

ஸ்டேஷன்களிலும், ரயில் பெட்டிகளிலும் இரயில்வே நிர்வாகத்தினர் வழங்கும் உணவு, சிற்றுண்டிகளின் தரக் குறைவை இதுவரை ரயில் பிரயாணிகள் தான் குறை கூறி வந்தார்கள். சென்னையில் நடைபெற்ற அகில இந்திய ஹோட்டல் அதிபர்கள் மகா நாட்டில் பேசும்போது ஜனாதிபதி கிரியே இப்போது இரயில்வே நிர்வாகம் பிரயாணிகளுக்கு வழங்கும் உணவு பற்றிக் குறைப்பட்டு விமர்சனம் செய்திருக்கிறார்.

''நம்முடைய பணத்தைக் கொண்டே நமக்கு இவ்வளவு மோசமான உணவையும், சிற்றுண்டி காப்பியையும் இரயில்வே நிர்வாகம் அளித்து வருகிறது. இரயில்வே நிர்வாகத்தினரால் தரமான உணவோ, சிற்றுண்டியோ காப்பியோ வழங்க முடியாவிட்டால் அவற்றை வழங்கும் பொறுப்பைத் தனிப்பட்ட ஓட்டல்களிடம் விடலாமே?'' என்று ஜனாதிபதி கூறியிருப்பதில் உள்ள ''தனிப்பட்டவர்களிடம் விட்டுப் பார்க்கலாமே?'' என்ற கேள்வி, சர்க்கார் நிர்வாகத்தில் தரம் குறைந்து விட்ட பலவற்றுக்கும் பொருந்தக் கூடிய யோசனை.


ஸ்ரீ ஆர். நடராஜ அய்யர்

## சாட்சி கூறிய உண்மை

கிணத்துக்கடவு தொகுதியின் தேர்தல் விசாரணையின்போது தி. மு. க. தேர்தல் ஏஜெண்டாக இருந்த ஒருவரையும் அவருக்கு வேண்டியவர்களையும் எதிர்த் தரப்பு வக்கீல் குறுக்கு விசாரணை செய்தபோது ஓர் உண்மை வெளிப்பட்டது.

''5000 பிரதிகளே விற்கும் குழலோசை என்ற பத்திரிகைக்கு நான் ஆசிரியர். இந்தப் பத்திரிகை அறநிலைய அமைச்சர் கண்ணப்பனுக்குச் சொந்தமான 'வளர்மதி' அச்சகத்தில் அச்சிடப்படுகிறது. இந்தப் பத்திரிகையின் 'சிறப்பிதழ்' ஒன்றை 'அரசின் சாதனை மலர்' என்பதாக வெளியிட்டோம். அந்த மலருக்கு முழுப் பக்க, அரைப் பக்க விளம்பரங்களாகக் கோவில்கள், கூட்டுறவுச் சங்கங்களிலிருந்து 26 பக்க விளம்பரங்கள் கிடைத்தன. ஆனும் கட்சிக்காரன் என்ற முறையில் எனக்கு இந்த விளம்பரங்களைக் கொடுத்து உதவி செய்தார்கள்'' என்று கோர்ட்டில் சாட்சி கூறியபோது ஒரு சலசலப்பு ஏற்பட்டதாகப் பத்திரிகைகள் செய்தி வெளியிட்டிருக்கின்றன. ஆளும் கட்சி ஆட்களுக்குச் சலுகை கிடைப்பதைப் பகிரங்கமாகக் கேள்விப்பட்டதுதான் கோர்ட்டில் ஏற்பட்ட சலசலப்புக்குக் காரணமாயிருக்குமோ?

## புரியப் புகட்டிய புண்ணியவான்!

ஸ்ரீ ஆர். நடராஜ அய்யர் திருச்சியில் இ. ஆர். ஹைஸ்கூல் என்ற புகழ் வாய்ந்த பள்ளியின் தலைமை ஆசிரியராகத் திகழ்ந்தார்.

அவர் இப்பள்ளியின் வளர்ச்சியையே தம் மூச்சுக் காற்றாகக் கொண்டார். வழக்கறிஞராகப் பட்டம் பெற்றிருந்தும் ஆசிரியப் பயிற்சியும் பெற்றுத் தம் தகப்பனார் இனையாத்தங்குடி ரங்கசாமி அய்யர் தோற்றுவித்த இ. ஆர். உயர்நிலைப் பள்ளியின் தலைமை ஆசிரியராக விளங்கினார்.

அன்பும் பண்பும், அதே நேரத்தில் கண்டிப்பும் கொண்ட நடராஜ ஐயர், கல்வி புகட்டும் முறையே தனி. எந்த விஷயத்தையும், வகுப்பு மாணவர்கள் அனைவரும் புரிந்து கொண்ட பின்னரே மேற்கொண்டு தொடருவார்.

தன்னடக்கமே உருவான நடராஜ அய்யர் கடந்த செப்டம்பர் மாதம் 17ந் தேதி தன்னுள் அடங்கி விட்டார். ஆம், இறைவனடி சேர்ந்து விட்டார்.

'ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால், தன் பிள்ளை தானாக வளரும்!' என்ற முதுமொழி இவர் விஷயத்தில் எழுத்துக்கு எழுத்து பலித்துள்ளது. இவர் குமாரர்கள் மூவரும் நல்ல பதவியில் இருந்து வருகின்றனர். கல்வித் துறையில் இவர் நினைவு என்றும் நிலைத்திருக்கும்.



# சிவமயம்; சர்வம் விஷ்ணு மயம் ஜகத்



## ஜகத்குரு ஸ்ரீகாஞ்சிகாமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

எல்லாத் தேவதைகளும் ஒரே பரமாத்மா தான். சிவனும் விஷ்ணுவும் வேறு வேறில்லை. ஆனாலும் இரண்டையும் வழிபடுகிறபோது கொஞ்சம் பிரித்து பக்தி செய்தால் அதிலும் ஒரு ரசம் இருக்கத்தான் செய்கிறது. பலவாகப் பிரிந்தும் ஒற்றுமையுடன் இருப்பது தான் (Unity in diversity) நம் மதத்தின் சாரம். இப்படியே சிவன், விஷ்ணு என்கிற இரண்டு மூர்த்திகளை வழிபடும்போது சாராம்சத்தில் அவை ஒன்றே என்ற உணர்ச்சி இருந்தாலும், ஒவ்வொரு மூர்த்தியை ஒவ்வொரு தத்துவத்துக்கு ரூபகமாக வைத்துக் கொண்டு பக்தி செய்வதில் ஒரு ருசி இருக்கிறது.

இப்படிச் செய்யும்போது சிவனை எல்லாவற்றுக்கும் அடிப்படையான, ஏக வஸ்துவான ஞானமாக **பா**விக்கலாம்; அந்த ஏக வஸ்துவை நானாவிதமாகக் காட்டி ஜகத்தை நடத்தும் சக்தியாக விஷ்ணுவை **பா**விக்கலாம். அதாவது சிவத்தைப் பரப்பிரம்மமாகவும், விஷ்ணுவைப் பராசக்தியாகவும் வைத்துக் கொள்ளலாம். அம்பிகையும் விஷ்ணுவும் சகோதரர்கள் என்று சொன்னாலும், அவர்கள் ஒன்றேதான் என்பது பரம ஞானிகளின் அநுபவம். ''அரியலால் தேவி இல்லை ஐயன் ஐயனார்க்கே'' என்று அப்பர் சுவாமிகள் பாடியிருக்கிறார். சங்கர நாராயண வடிவத்தையும் அர்த்தநாரீசுவர வடிவத்தையும் பார்த்தால் இந்த உண்மை தெரியும். இரண்டிலும் வலப் பக்கம் பரமேசுவரனுடையது. ஒன்றிலே இடப் பக்கம் விஷ்ணு; இன்னொன்றில் அதே இடதுபுறம் அம்பாளுடையது.

இருக்கிற ஒன்றே ஒன்றை, இல்லாத பலவாகக் காட்டுகிற சக்தியே அம்பாள் அல்லது விஷ்ணு. அதாவது ஜகத் முழுதும் விஷ்ணு ஸ்வரூபம். 'விச்வம் விஷ்ணு' என்றுதான் சஹஸ்ரநாமம் ஆரம்பிக்கிறது. 'சர்வம் விஷ்ணு மயம் ஜகத்' என்கிற வாக்கும் இருக்கிறது. உலக பரிபாலனம் விஷ்ணுவுக்குரியது என்று சொல்கிறோம். உலகத்திலே இருக்கிற ஆனந்தங்களை, உணர்ச்சிகளை எல்லாம் தெய்விகமாக்குகிற பக்தி மார்க்கமும் விஷ்ணு சம்பந்தமாகவே அதிகம் தோன்றுகிறது. ஹரிகதை, ஹரிநாம சங்கீர்த்தனம் என்றெல்லாம் சொல்வதுபோல் ஹரகதை ஹரகீர்த்தனம் என்று சொல்வதில்லை. கதை பாட்டு இந்த ஆனந்தமெல்லாம் விஷ்ணுவிடமே அதிகம். 'பாகவதர்' என்றால் பகவானைச் சேர்ந்தவர் என்றே அர்த்தமாயினும், பொதுவாக, பாகவதர், பாகவதம் என்றெல்லாம் சொன்னால் விஷ்ணு பக்தர், விஷ்ணுவின் கதை என்றே எடுத்துக் கொள்கிறோம். பிரபஞ்ச சௌந்தரியங்களையெல்லாம் வைத்துப் பூஜை, பக்தி, பஜனை, கதை செய்வதெல்லாம் விஷ்ணு சம்பந்தமாயிருக்கிறது.

ஆனால் இந்தப் பிரபஞ்சத்தைவிட்டு, இதற்கு ஆதாரமான சாந்தத்தில் நிலைக்கும்போது சிவசம்பந்தம் அதிகம் தோன்றுகிறது. சிவஞானம், சிவயோகம் என்று சொல்கிற அளவுக்கு விஷ்ணு ஞானம், விஷ்ணு யோகம் என்பன காணப்படவில்லை. பலவாக இருக்கிற உலகனைத்தும் விஷ்ணு என்பதால் ''சர்வம் விஷ்ணு மயம் ஜகத்'' என்ற வாக்கு தோன்றியிருக்கிறது. பலவாகக் காண்கிறது போனால் 'சர்வம்' போய்விடும். ஏகம்தான் இருக்கும்போது 'சர்வம்' என்ற வார்த்தைக்கு இடம் ஏது? அங்கே அந்த ஏகத்தை அநுபவிக்கிறவனைத் தவிர ஜகம் என்கிற ஒன்றும் தனியாக இல்லை. ஜகத்தும் அடிபட்டுப் போச்சு! சிவம் ஒன்றே எஞ்சி நிற்கிறது. இதனால்தான் ''சிவமயம்'' என்றே சொல்கிறார்கள்.

Vibgyor என்ற ஏழு நிறங்களில் வெளுப்பும் சேரவில்லை; கறுப்பும் சேரவில்லை. உண்மையில் வெள்ளைச் சிவன், கரிய திருமால் இருவரும் பிரபஞ்ச வர்ணங்களில் (லௌகிகத்தில்) சேராதவர்கள். எதை எரித்தாலும் முதலில் அது கறுப்பு ஆகிறது. ஆனால் அப்போதும் எரிபட்ட வஸ்துவுக்கு நிறம் மாறினாலும் ரூபம் அப்படியே இருக்கும். நியூஸ் பேப்பரைக்கூடக் கொளுத்திவிட்டு உடனே அணைத்துவிட்டால் அது முழுக்கக் கறுப்பானாலும், அந்தக் கறுப்புக்குள்ளேயே அதைவிடக் கறுப்பாக எழுத்துக்களும் தெரியும். துணியும் இப்படியே மடிப்புக்கூடக் கலையாமல் நெருப்பில் கருகுவதுண்டு. முழுக்க நீற்றுப் போய் உருவம் இழப்பதற்கு முற்பட்ட நிலை இது. இதுதான் 'சர்வம் விஷ்ணு மயம் ஜகத்.' இந்த நிலையில் ஜகத் இருப்பது போல் இருக்கிறது; ஆனாலும் இந்திரிய சேஷ்டைகள் எரிந்து போய் விட்டன. யோகத்திலும் ஞானத்திலும் மேலும் ஆன்மாவைப் புடம் போட்டால் எல்லாம் நீற்றுப் போய் பஸ்மமாகி விடும். எரிகிற வஸ்துக்கள் முதலில் கறுப்பானாலும், கடைசிவரையில் எரித்தால் எல்லாமே வெள்ளை வெளேரென்று நீறுகின்றன. இதுதான் 'சிவமயம்'.

அடுத்த இதழில்: **''அரனை மறவேல்''**
**''திருமாலுக்கு அடிமை செய்''**

''பஞ்சாயதன பூஜை'' குறித்த அருள்வாக்கு வெளியானதிலிருந்து பல அன்பர்கள் மேற்குறித்த பூஜைக்குரிய பாணலிங்கம் (சிவன்), சுவர்ணரேகா சிலா (அம்பிகை), சாளக்ராமம் (விஷ்ணு), ஸ்படிகம் (சூரியன்), சோணபத்ரம் (விநாயகர்) ஆகிய **இயற்கையான** மூர்த்திகள் கிடைக்குமிடத்தைத் தெரிவிக்குமாறு நமக்கும், ஸ்ரீ ஆசாரியர்களின் மடத்துக்கும் எழுதி வருகிறார்கள். இவை ஐந்தும் Bharadwaj & Co., B 5/270, Hanuman Ghat, Varanasi-1, U.P. என்ற இடத்தில் கிடைக்கும் என்று காசியிலுள்ள காமகோடி மடத்தின் நிர்வாகி ஸ்ரீ வி. எஸ். செல்லம் அய்யர் தெரிவிக்கிறார்.

கோ-ஆப்டெக்ஸில் உங்கள் பணத்தின் மதிப்பு உயருகிறது!



10%

விசேட தள்ளுபடி

25-9-'73 முதல் 29-10-'73 வரையில்

Criterion Co 3006 TM



# ஹிப்பிகளுடன் மூன்று நாள்



லா. ச. ரங்கராஜன்

கனாட் பிளேஸ் (தில்லி) முச்சந்தியில் ம. ஹேறனல் எதிர்க் கிராதியில் சாய்ந்து சிரித்துக்கொண்டிருந்தேன். கவ்வும் கவலைகளைச் சற்று நேரமாயினும் மறப்பதற்காகவே இங்கு நின்று கொண்டிருந்தேன். அரசியல் விரிசல்களோ, பண முடையோ, பாமர மக்களின் பற்றாக்குறையோ, இவை எவற்றின் நிழலையும் இங்கே காண முடியாது. இவற்றால் பாதிக்க முடியாத வர்க்கத்தின் வாரிசுகள் மட்டுமே உலவும் கோலாகல வட்டமோ இது?

அந்தப் பெண்ணைப் பார்த்தபோது நானே என்னை மறந்தேன். கவலைகள் கழன்றன. இந்த முச்சந்தியில்தான் சந்தித்தேன். எடுப்பான உயரம். எக்கு வளைகள் குலுங்கும் ஜோரான கைவீச்சு நடை. மெக்ஸிகோ நாட்டு அழகி போன்ற பழுப்புக் கோதுமை மேனி வண்ணம். போவோர் வருவோருள் அவள் ஒளி வெள்ளமாகப் பளிர்த்தாள். ஆம்! போவோர் மத்தியில் சற்றுமுன் தூரத்தே பார்த்தேன். இப்போது வருவோரிடையே என் அருகில், மிக மிக அருகில், எழிலோவியமாய் மிதந்தாள்.

அப்போதுதான் அவளது அந்த மூன்று ஆண் தோழர்களைச் சரியாகக் கவனித்தேன். இருவர் அசல் ஹிப்பிகள். ஒருவன் ஹிப்பியாக மாறிய உள்ளூர் ஆசாமி என எழுதி ஒட்டிய கலப்படப் பேர்வழி. சகதியில் செந்தாமரை போல் இந்தக் கூட்டில் இந்தப் பெண் எப்படிச் சிக்கினாள்? அவள் ஆடை அலங்(கோல)காரத்தில் என்னவோ ஹிப்பி (அ)நாகரிகம் புரையோடி யிருந்தது. கலைந்து புரளும் சில்க் கூந்தலை இறுக்கும் அழுக்கு சில்க் ரிப்பன்.

வளையத்தலை சாது வலையங்களில் ஊஞ்சலாடும் குண்டல வரிசை. சிறிதும் பெரிதுமாகப் பாசி மணி மாலைகள். உடலோடு படியும் ரா(ணி)ஜ பார்ட் லக்னோ குர்தாவில் இழையும் ஜரிகை வேலைப்பாடு. சிக்கனக் கருக்கங்களுடன் வழியும் ராஜஸ்தான் ஓட்டுப் பாவாடை. இவற்றினூடே குழையும் நெளிவு சுளிவுகளின் வாளிப்பு. ஆயினும் சாதாரணமாக ஹிப்பிகளிடம் காண முடியாத சுத்தமான மினுமினுப்பு. கண்களில் ஓர் ஆழம். சாந்தம். முகத்தில் ஒரு பொலிவு; தெளிவு.

குறுந்தாடி ஹிப்பித் தடியன் என் பக்கம் சுட்டு விரல் நீட்டி அவர்களுக்குள் ஏதோ பேசிக் கொள்வது போல் எனக்குப் பட்டது. இதோ, அசல் ஹிப்பி என் பக்கம் திரும்புகிறான். நாய்க் குட்டியைத் 'தோ தோ' என்று அழைப்பது போல் தலை சாய்த்து விரல் ஆட்டி என்னைத்தான் கூப்பிடுகிறான்.... வாலைக் குழைக்காமல் முறைப்பாக அவன் அருகில் சென்றேன். அந்த மூன்று ஆண் ஹிப்பிகளின் அவல முக பாவமும் ஹிப்பிணியின் 'அல்ட்ரா' கனிவுப் பார்வையும் அசம்பாவிதம் ஏதும் இல்லையென்று உணர்த்தின. முகத்தில் விறைப்பைக் குறைத்தேன். விநயத்தைக் கூட்டினேன்.

''எக்ஸ்கியூஸ் மி மேன். வி லைக் யூ வெரிமச். வில் யூ மைண்ட் எ கப் ஆஃப் காஃபி வித் அஸ்?'' என்றான் கலப்பட ஹிப்பி அடக்கமாக. மற்ற இருவரும் ஆங்கிலப் புன்னகை பரிமாறினர். ஹிப்பிணியின் மனோகர முறுவல் பொழிவில் சொக்கினேன். (இனி ஹிப்பிகளுடன் நடந்த உரையாடல்களைத் தமிழ்ப்படுத்தித்தான் எழுதப் போகிறேன்.)

அப்புறம் சுதாரித்தேன். பெண்ணைக் காட்டித் தலையைத் தடவி இந்த வேளை டிபனுக்கு என் பையில் கையைப் போடப் பார்க்கிறார்களோ எனத் தயங்கினேன். ''என்னிடம் பணம் இல்லையே?'' எனத் துல்லியமாகக் கை விரித்தேன். (பர்ஸில் இருப்பது நான்கே ரூபாய். சளுட் பீனெல் ரெஸ்டாரண்டில் ஐந்து பேருக்கு ஒரு ரவுண்டு டீக்குக்கூடக் காணாது.)

''கவலைப்படாதே பையா! எங்களுக்குப் பண முடை இல்லை. உன் சிநேகிதம்தான் முக்கியம்'' எனக் கொச்சை ஹிப்பியில் சொல்லிச் சிரித்து ஒட்டைப் பைஜாமாவிலிருந்து கற்றை ரூபாய் நோட்டுக்களை உருவி விசிறி மடித்துக் காட்டினான் ஆங்கில ஹிப்பி. அந்தத் தேவதை ஹிப்பிணி அபாரமாக ஒரு புன்முறுவல் பூத்தாள்.

செல்லார் 'டிஸ்கோதே' (இதற்குத் தமிழ் என்ன?)க்குள் அழைத்துச் சென்றார்கள். பாதாளப் படி வரிசை. அந்தகாரம். அப்புறம் மினுக் மினுக் வாந்தல் மின் விளக்குகள். மெல்லிய இசை. இரட்டு மேஜையருகில் தட்டுத் தடுமாறி ஒரு வழியாக உட்கார்ந்தேன். அருகில் ஒளி இழை வீசும் குஞ்சு விளக்கொன்றின் வெளிச்சத்தை ஹிப்பி சற்றே பெரிதாக்கினான். என் புது நண்பர்களை இப்போதுதான் கண்ணுறப் பார்க்க முடிந்தது. அதுவும் எனக்கு நேர் எதிராக முழங்கையை ஊன்றி மலர்ந்திருந்த ஹிப்பிணி



யைப் பளிஜோராக... இருட்டுச் சூழலில் கண்கள் பழகின.

''எனக்கு உங்களைக் கண்டதுமே பிடித்து விட்டது. எப்படியாவது சிநேகம் கிட்ட வேண்டும் என ஆவல்.'' ஆங்கில ஹிப்பியின் அளவளாவல் ஆரம்பம். ''உங்கள் நட்பு எங்கள் வெற்றி. உங்கள் கண்ணியம் எங்கள் பாக்கியம்... நீங்கள் எந்த மாநிலத்தைச் சேர்ந்தவரோ?'' என்று குறுந்தாடியின் குறுக்குக் கேள்வி.

சொன்னேன்.

ஹிப்பிணியின் வில் புருவங்கள் உயர்ந்தன. தாழ்ந்தன. ''தமிழரா! என் ஊகம் சரிதான்'' என்று மதுரத் தமிழிசையில் தேன் பாய்ச்சுவது அவளேதானோ? இந்த எழிலுருவ ஹிப்பிச்சி ஓர் தமிழச்சியா? வியப்பு மிகுதியில் வார்த்தைகளுக்குத் தடுமாறினேன்.

''நீங்கள் இருவரும் உங்கள் சுந்தர மொழிதனில் அளவளாவிக் கொண்டிருங்கள். எங்கள் பழைய நண்டன் ஒருவன் அந்தக் கோடி மேஜையில் இருக்கிறான். அவனிடம் பேசிவிட்டு வருகிறோம்'' என்று மூன்று ஆண் ஹிப்பிகளும் சொல்லி வைத்தாற்போல் எழுந்தனர். போயினர். ஏதோ வலை விரிக்கத் திட்டமிடுகிறார்களோ? இருக்கட்டுமே? எனக்கோ வேலை வெட்டி இல்லை. இந்தத் தமிழ் மின்மினி ஹிப்பிணி தீட்டும் எந்தத் திட்டமும் எனக்குச் சட்டமே.

அடுத்த பதினைந்து நிமிடங்களும் தித்தித்த தமிழ் உரையாடலின் சாரத்தை மட்டுமே எழுதப் போகிறேன். பெயர் காஞ்சனா (வட்டுப் பொருத்தம்). ஊர் தங்கச்சிமடம் (ராமேசுவரம் அருகிலாம்). தாயாருடன் பிழைக்க வந்தது சென்னை. ஏழைமையிலும் பத்து கிளாஸ் இலவசமாகப் படித்துவிட்டவள். அப்புறம் புடவைக் கடைப் பணிப்பெண்ணாக வேலை பார்த்தாள். தான்தோன்றி நாகரிக மோகம். ஆறு மாதங்களுக்கு முன்புதான் இந்த ஹிப்பிகளுடன் சந்திப்பு. தில்லியில் வசதியான வாழ்க்கை என்று நம்பி ஓடி வந்துவிட்டாள். ஏராளமாகப் பணம் புரட்ட ஏதோ பெரிய திட்டம் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதற்குக் கண்ணியமாகத் தோன்றும் இன்னொருவரின் உதவி தேவை. ''இதற்குத் தகுதி உள்ளவர் என்று உங்களை இப்போது பார்த்தவுடனேயே தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். கண்டதும் காதல் மாதிரி'' என்று முடித்தாள் காஞ்சனா. பிறகு ''உங்களைப் பற்றி நீங்கள் ஒன்றும் சொல்லவில்லையே?'' என்று கேட்டாள்.

சொன்னேன். அனாதையாகச் சிற்றப்பன் வீட்டில் தண்டச் சோறு சாப்பிட்டு இண்டர்மீடியட் வரையில் படித்துக் 'கோட்' அடித்து ஊர் ஊராக வேலைக்கு அலைந்து கடைசியில் டில்லி மாநகர் அடைந்து கரோல்பாக் ராமானுஜம் மெஸ்ஸில் கணக்கெழுதி, தண்டச் சோறு சாப்பிட்டு வருவதைச் சொன்னேன். கையைக் கட்டி, வாயைக் கட்டி எப்படியாவது இரண்டாயிரம் ரூபாய் சேர்த்துக் கொண்டு சொந்தமாக ஒரு சிறு வியாபாரத்தில் இறங்கி முன்னுக்கு வரவேண்டுமென்கிற என் தீவிரத்தைச் சொன்னேன். முன் பின் பார்த்திராத அவளிடம் என் வெம்பிய உள்ளத்தை வாய் கக்கியது. கேட்டாள். அனுசரணையாகக் கேட்டாள். அவள் உடல் வாளிப்பைக் காட்டிலும் அவளது பளிங்கு உள்ளத்தின் வசீகரம் என்னை வளைத்துப் போட்டது.

ஹிப்பிகள் திரும்பி வந்து உட்கார்ந்தார்கள். என் வரலாற்றின் சுருக்கத்தைக் காஞ்சனா சொல்லக் கேட்டார்கள். ''கவலைப்படாதே, அப்பனே! இனி நாங்கள் இருக்கிறோம். நமக்கு நல்ல எதிர்காலம் காத்திருக்கிறது'' என்று உம்மணாமூஞ்சியான என்னை உற்சாகமூட்டினர். டைனுப்பின் கேக் பாளம் பாளமாக வந்தது. கெட்டில் நிறைய மணம் கமழும் காப்பி. கோப்பை வழிய ஐஸ்-கிரீம்.

அடுத்த இரண்டு நாட்களும் அவர்கள் தார்யாகஞ்சில் தங்கியிருந்த ஹோட்டல் அறையில் சந்தித்தேன். பழைய கட்டிடம். ஆயினும் வசதிகள் நிறைந்த இரண்டு மூலை அறைகள். காஞ்சனாவுக்குத் தனி அறையாம். அவள் மட்டும் இந்த நாடோடி வாழ்க்கை முறையில் பட்டும் படாமல் ஒதுங்கியே உழன்றதைக் கவனித்தேன்..

மூன்றாம் நாள் மூவரும் தங்கள் திட்டத்தை என்னிடம் சர்வ சாதாரணமாக விவரித்தனர். விபரீதச் சதித் திட்டம்! திடுக்கிட்டேன். அப்புறம் காஞ்சனாவின் அமைதியான ஆமோதிப்பால் அடங்கினேன்.

திட்டம் இதுதான்: ஜன்-பத் முகப்பில் திரும்பியதும் சிவப்பு நீல மஞ்சள் நியான் விளக்குகள் இமைத்துக் காட்டும் பிரும்மாண்ட பெயர்ப் பலகையும் அதன் கீழ் வெண்ணிற விளக்கொளியில் ஒளிரிடும் ஷோகேஸ் வரிசைகள் கொண்ட நகைக் கடையும் காணலாம். நான் மறு நாள் மாலை ஆறரை மணிக்குக் காஞ்சனாவுடன் அக்கடை வாசலில் டாக்ஸியில் டிப்டாப்பாக இறங்க வேண்டும். புதல்கண்ட் சமஸ்தான இளவரசனும் இளவரசியும் என்று அறிமுகப்படுத்திக்கொள்ள வேண்டும். சமஸ்தானம் பறி போவதற்கு முன் படேலுக்குத் தெரியாமல் மறைத்த எஸ்டேட் கள்ளப் பணம் எக்கச்சக்கமாகப் பதுக்கி வைத்திருக்கும் இளவரசன் நான். கடை முதலாளி சேட்ஜி எங்கள் இருவரையும் வினயமாக இரும்பு அறைக்கு இட்டுச் செல்வார். பெட்டி பெட்டியாகத் திறந்து வரிசை வரிசையாக வைப்பார். நான் வைர வைடூரியக் கற்களை மேலெழுந்தவாரியாக ஆராய வேண்டும். சரியாக ஆறே முக்கால் மணிக்கு... கப்...ஒரே கும்மிருட்டு! ஆம்! விளக்குகள் அணையும். கடை விளக்குகள் மட்டும் அல்ல; ஜன்-பத் வரிசை முழுவதும் பிளாக்-அவுட். எப்படி? அந்தக் கட்டிடத்துக்குப் பின்புறச் சந்தில் காப்பி போர்டை ஒட்டினாற்போல் ஒரு சந்தில் மெயின் மின்சார மீட்டர். அதன் கலமூலாவில் கலப்பட ஹிப்பி செப்புக் கம்பி நுழைத்து ஸ்விட்சைத் தட்டிப் பசர்... ப்யூஸ் செய்து விடுவான். கோட்டுப் பையில் தயாராக வைத்திருக்கும் சிறு தோல் பையை உருவி, தட்டில் குவிந்து கிடக்கும் வைரக் கற்களைச் சரித்துக் கட்டிக் கொண்டு உடனே இளவரசியுடன் கம்பி நீட்ட வேண்டும். எக்கச் சக்கமாக ஏதாவது நடந்து விட்டால் முதலாளியை மயக்கிச் சாய்க்க நெடி மருந்துப்புட்டி தயாராக இருக்கும். அறைக்கு

# பிறந்த நாள் விழா



மதிப்பிற்குரிய அன்னை
செட்டிநாட்டரசி

**உயர்திரு ராணி லேடி மெய்யம்மை ஆச்சி**

**நிகழ்ச்சி நிரல்**

ராணி அம்மா என்று அன்புடன் அழைக்கப்படும்
கொடைவள்ளல்
மாண்புமிகு செட்டிநாட்டரசி

**ராணி லேடி மெய்யம்மை ஆச்சி** அவர்களின்
**பிறந்த நாள் விழா**

1973 அக்டோபர் 11-ஆம் நாள் வியாழக்கிழமை மாலை 6 மணிக்கு
இராஜா அண்ணாமலைபுரம், சிருங்கேரி மடம் சாலையில் உள்ள
சிருங்கேரி ஜகத்குரு பிரவசன மந்திரத்தில்

தமிழ்க்கடல் திரு. ராய. சொக்கலிங்கன் அவர்களின்
தலைமையில் நடைபெறும்

சிறப்புரை ஆற்றுபவர்கள் :
கவிஞர்கோ புத்தனேரி திரு இரா. சுப்பிரமணியம் அவர்கள்
திருமதி அன்னபூரணி வீரப்பன் அவர்கள்
திரு மெ. செ. ராம. மெய்யப்பன் அவர்கள்

டாக்டர் ராஜா சர் முத்தையா செட்டியார் குரூப் நிறுவனங்களின்
நிர்வாகத்தினரும், மனமகிழ் மன்றப் பணியாளர்களும்

வெளியில் ஒரு வராந்தாவைத் தாண்டினால் பின்புறச் சந்துக் கதவு. புகுந்து ஓடுவேன். சந்து முனையில் 'நியூயார்க் டைம்ஸ்' ஆபீஸ் வாசலில் காத்து நிற்கும் சவப்பட ஹிப்பியின் கையில் வைரப் பையைத் திணித்துவிட்டுக் காஞ்சனாவுடன் தார்யாகஞ்ச் ஹோட்டல் அறைக்குப் போய்விட வேண்டும்.

தங்க இழைகள் ஓடும் தகதகக்கும் 'க்ளோஸ் கோட்'. முத்துப் பதக்கத்துடன் ஓர் அலங்காரச் சங்கிலி. எடுப்பான மீசை. ஹோட்டல் அறை முழுக் கண்ணாடியில் எனக்கே இந்த ராஜகுமாரனை அடையாளம் தெரியவில்லை. பின்னால் வந்து நின்ற இளவரசி என்னைப் பிரமிப்பில் ஆழ்த்தினாள். அலங்காரக் கூந்தல் கொண்டையைத் தொட்டாற் போல் பூக்காடிட்ட, தகதகக்கும் பனாரஸ் ஜரிகைப் புடவை. மைதீட்டிய கயல் விழிகள். செம்மை கவ்விய மொழுமொழுக் கன்னத்தில் அழகு மச்சம். பொறுக்கினாற்போல், போலி நகைகள்.

மணி ஆறரை. பயத்தின் சாயலே படாமல் மிதப்பாக இளவரசி காஞ்சனாவுடன் வைரக் கடை வாசலில் இறங்கினேன்.

முதலாளி எதிர் கொண்டு அழைத்தார். "நீங்கள் இங்கு விஜயம் புரிவதைப் பற்றி இப்போதுதான் டெலிபோன் செய்தி வந்தது. வரணும், வரணும் (அச்சா! என் இமிடேஷன் செக்ரடரியின் போன் வேலையா) முஸம்பி ஜூஸ் தயார் ஸாஹேப்ஜி" (சரி. ஐந்து நிமிஷம் ஓட்டலாம்.)

பாதுகாப்பான தனி அறை. இரும்பு பீரோக்களிலிருந்து சிறுசிறு பேழைகள் சேட்ஜி கைப்பட வெளிவந்தன. அறையினுள் பளீரிடும் விசேஷ விளக்கொளியில் வைரக் கற்களின் ஜ்வலிப்பு கண்ணைப் பறித்தது.

அடுத்த விநாடி இருள். மையிருள். 'கபக்' கென்று கண்ணாடித் தட்டில் குவித்திருந்த வைரக் கற்களில் கை வைத்தேன். லபக். என் இருட்டுப் புறங்கையை அழுத்தும், ஐயோ, இந்த முரட்டு... இல்லை... அதி மிருதுக் கரம் யாருடையது?

"உஷ்! ஆபத்து. ஒன்றையும் எடுக்காதீர்கள். நான் சொல்வதைக் கேளுங்கள். என்னுடன் பேசாமல் கிளம்புங்கள். உம்." என்னது?! தமிழில் இப்படிப் பேசுவது என் காஞ்சனாவா? ஹிந்தியில் தொடர்ந்தாள்: "சேட்ஜி! ஜாக்கிரதையாக எல்லாவற்றையும் எடுத்து வைத்துக் கொள்ளுங்கள். சகுனம் சரியாக இல்லை. விளக்கு திரும்பவும் வரும் வரை காத்திருக்கவும் எங்களுக்கு நேரமில்லை. முடிந்தால் நாளை வருகிறோம்." கணீரென்று கூறிவிட்டு காஞ்சனா என் கையைப் பிடித்துத் தரதரவென்று இழுத்துக் கொண்டு பின்புறச் சந்துக்கு விரைந்தாள். என் கோட்டினுள் இருந்த தோல் பையைப் பிடுங்கித் தன் புடவைத் தலைப்பிலிருந்து எதையோ சரித்துச் சுருக்கிட்டாள். "வாயைத் திறக்காதீர்கள். இந்தப் பையைத் திட்டப்படி அந்த முனையில் நீவட்டிக் தடியன் மாதிரி நிற்கும் உங்கள் ஹிப்பி நண்பனிடம் வீசி எறிந்து விட்டு ஓடுவோம்" என்றாள்.

ஒரே குழப்பம்... பீதி... திகில். இயந்திர கதியாய் அவள் சொல்படி இயங்கினேன்.

கஸ்தூரிபா ரோட்டில் டாக்ஸியில் ஏறி உட்கார்ந்தபோது எனக்கு மூச்சு வாங்கியது. படபடப்பு தடதடத்தது. "கஹாங் ஜானா ஹை ஸாப்?" என்றான் டாக்ஸி டிரைவர்.

"ஸீதே தார்யாகஞ்ச்" எனக் கம்பீரமாக ஆணையிட்டாள் காஞ்சனா.

"வைரப் பை கிடைக்காமல் தார்யாகஞ்ச் ஹோட்டல் போனால் என்னைக் குழி வெட்டிப் புதைத்துவிடுவார்களே" என்று பதறினேன்.

"வைர மூட்டையோடு போனாலும் அதே கதிதான் தெரியுமா?" என்றாள் ஆழ்ந்த குரலில். எனக்குக் குழப்பம் தலையைச் சுற்றியது. அவள் விஷயத்தைச் சுருக்கமாக விளக்கினாள். இந்தச் சதித் திட்டத்துக்கு என்னைப் பயன்படுத்தி வைரக் கற்கள் அவர்கள் கைக்குக் கிடைத்ததும் என்னை ஹோட்டல் அறையில் மடக்கிக் கஞ்சா போதையில் மயக்கி ஊசி ஏற்றிக் கட்டிப் போட்டுவிட்டு அவர்கள் எல்லோரும் அன்று இரவே விமானத்தில் பம்பாய் ஓடிவிடத் திட்டமாம். "வேறு கதியில்லாமல் இவர்களை நம்பியிருந்தேன். ஆனால் நான்கு நாட்களுக்கு முன் உங்களைச் சந்தித்துப் பேசியதிலிருந்து ஏதனாலோ, 'உங்களுக்கு விபரீதம் நேரக் கூடாது. அதற்கு நான் உடந்தையாக இருக்கக் கூடாது' என்று முடிவு கட்டிவிட்டேன். நாம் திட்டத்திலிருந்து திடீரென்று நழுவினாலும் நம்மைச் சந்தேகப்பட்டு இருவரையுமே தொலைத்துவிட அஞ்ச மாட்டார்கள். ஆகவே இப்படி ஒரு நாடகம். இருட்டுச் சந்து முனையில் நான் சொன்னபடி நீங்கள் ஹிப்பி நண்பனிடம் வீசிய பையில் என்ன இருக்கிறது தெரியுமா? நிறைய கூழாங் கற்கள்!" பக்கென்று சிரித்தாள். எனக்குப் பகீர் என்றது.

"தார்யாகஞ்ச் நெருங்குகிறோம். அங்கே எங்கே போக வேண்டும்?" என்றான் டிரைவர்.

"போலீஸ் ஸ்டேஷனுக்கு" என்றாள்.

தூக்கி வாரிப் போட்டது. அவள் முகத்தை ஏறிட்டு நோக்கினேன்.

அவள் நிதானமாகச் சொன்னாள்: "பயப்படாதீர்கள். போன வருஷம் இதே மாதிரி அசோகா ஹோட்டல் ஷோ ரூமில் நகைகளைத் திருடி இவர்கள் ஏப்பம் விட்டிருக்கிறார்கள். இவர்களைப் பிடிக்கத் துப்பு சொல்பவருக்கு ரூபாய் ஐயாயிரம் சன்மானம் என்று போலீஸ் ஏற்கனவே அறிவித்திருக்கிறதாம். என்னிடம் பெருமையாகச் சொல்லிக் கொள்வார்கள். ஹோட்டல் அறையில் நம்மை வரவேற்கக் காத்திருப்பவர்களை இதோ கொஞ்ச நேரத்தில் போலீஸார் சந்திக்கப் போகிறார்கள். போலீஸ் சன்மானத்தை உங்களிடம் கொடுத்து விடுகிறேன். உங்கள் பழைய திட்டப்படி கௌரவமாக வியாபாரம் தொடங்குங்கள்... என்னைப் பற்றிக் கவலை வேண்டாம். எனக்குக் கடவுள் விட்ட வழி.." பெருமூச்செறிந்தாள் காஞ்சனா.

மழைக்காற்று சில்லென்று வீசியது. என் உடல் சிலிர்த்தது அதனால் அல்ல. "நான் வியாபாரத்தைக் கவனித்துக் கொண்டால் என்னை யார் கவனித்துக் கொள்ளப் போகிறார்களாம்?" என்று மனம் நெகிழ்ந்து அவள் தளிர்க் கரத்தைப் பற்றி இழுத்தேன்!

# சிவகாமியின் சபதம்

பத்தொன்பதாம் அத்தியாயம்

## புத்தர் சிலை

நழுவித் தரையில் விழுந்த முத்து மாலையைக் குமார சக்கரவர்த்தி குனிந்து எடுத்துக் கொடுத்ததையும், அதைச் சிவகாமி முக மலர்ச்சியுடன் வாங்கி அணிந்து கொண்டதையும் பார்த்த ஆயனரின் முகம் மீண்டும் பிரகாசம் அடைந்தது.

சக்கரவர்த்தி இதையெல்லாம் கவனியாததுபோல் கவனித்தவராய், ஆயனரைப் பார்த்து, ''மகா சிற்பியாரே! இந்த முத்துமாலையைப் போல் எவ்வளவோ உயர்ந்த பரிசுகளையெல்லாம் உமது புதல்வி வருங்காலத்தில் அடையப் போகிறாள். இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்துக்கே அவளால் புகழும் மகிமையும் ஏற்படப் போகின்றன. வருங்காலத்தில் எது எப்படியானாலும், சிவகாமியின் நடனக் கலைப் பயிற்சி மட்டும் தடைப்படக் கூடாது. அவளுக்கு எவ்விதத்திலும் உற்சாகக் குறைவு நேரிடாமல் நீர் பார்த்துக் கொள்ள வேண்டும்!'' என்று சொன்னார்.

ஆயனர், ''பல்லவேந்திரா! தாங்களும் குமார சக்கரவர்த்தியும் உற்சாகப்படுத்துவதற்கு இருக்கும்போது சிவகாமிக்கு உற்சாகக் குறைவு ஏன் ஏற்படப் போகிறது? எனக்குத்தான் என்ன கவலை?'' என்று சொல்ல, மகேந்திரப் பல்லவர் கூறினார்: ''அப்படியில்லை ஆயனரே! இந்த யுத்தம் காரணமாக நானும் குமார சக்கரவர்த்தியும் சில காலம் இவ்விடம் வர முடியாமலும் உங்களைப் பார்க்க முடியாமலும் போக



அமரர் கல்கி

லாம். அதனாலே உங்கள் இருவருடைய கலைப் பணிக்கும் எந்தவிதமான குந்தகமும் ஏற்படக் கூடாது. சிவகாமி புத்த பிக்ஷுணியாக விரும்புவதாகச் சற்று முன்னால் சொன்னீரல்லவா? ஒருவிதத்தில் அது பொருத்தமானதுதான். சிவகாமி சாதாரணமான பெண் அல்ல; மற்றப் பெண்களைப்போல் உரிய பருவத்தில் இல்வாழ்க்கையைமேற்கொண்டு அற்ப சுகங்களில் காலங் கழிக்கப் பிறந்தவள் அல்ல; பெண்ணாய்ப் பிறந்தவர்களில் லட்சத்திலே ஒருவருக்குத்தான் இப்பேர்ப்பட்ட கலை உணர்ச்சி ஏற்படும்; அதைப் போற்றி வளர்க்க வேண்டும். சம்சார வாழ்க்கையைப் பொறுத்த வரையில் சிவகாமி தன்னைப் பிக்ஷுணியாகவே நினைத்துக் கொள்ளலாம்; தெய்விகமான நடனக் கலைக்கே அவள் தன்னை அர்ப்பணம் செய்து கொள்ள வேண்டும்.''

இந்த மொழிகளைக் கூறியபோது மகேந்திரப் பல்லவரின் மனத்திலே என்ன இருந்தது என்பது நமக்குத் தெரியாது. ஆனால், அவருடைய மொழிகள் அங்கிருந்த மூன்று பேருடைய உள்ளங்களிலும் வெவ்வேறு விதமான உணர்ச்சிகளை உண்டாக்கியிருக்க வேண்டுமென்பது அவர்களுடைய முகபாவ மாறுதல்களிலிருந்து நன்கு தெரிந்தது.

ஆயனர் தமது உள்ளக் கிளர்ச்சியை வார்த்தைகளினாலே வெளியிட்டார்: ''பிரபு! என்னுடைய மனத்தில் உள்ளதை அப்படியே தாங்கள் கூறிவிட்டீர்கள்; இல்வாழ்க்கையை மேற்கொண்டு குழந்தை குட்டிகளைப் பெற்று வளர்ப்பதற்கு எத்தனையோ லட்சம் பேர் இருக்கிறார்கள். இந்த அபூர்வமான தெய்வக் கலையைப் பயின்று வளர்ப்பதற்கு அதிகம் பேர் இல்லைதானே?'' — இவ்விதம் ஆயனர் சொல்லிக் கொண்டே சிவகாமியைத் திரும்பிப் பார்த்து, ''சக்கரவர்த்தியின் பொன்மொழிகளைக் கேட்டாயா, குழந்தாய்?'' என்றார்.

சிவகாமியின் முகமானது அச்சமயம் கிழ்த்தரச் சிற்பி அமைத்த உணர்ச்சியற்ற கற்சிலையின் முகம் போல் இருந்தது. எத்தனையோ விதம்விதமான உள்ளப்பாடுகளையெல்லாம் முக பாவத்திலே, கண்ணிமைப்பிலே, இதழ்களின் மடிப்பிலே அற்புதமாக வெளியிடும் ஆற்றல் பெற்றிருந்த சிவகாமி, அச்சமயம் தன் சொந்த மன நிலையை முகம் வெளியிடாதபடி செய்வதில் அபூர்வத் திறமையைக் காட்டினாள் என்றே சொல்ல வேண்டும்.

ஆனால், நரசிம்மவர்மர் அபிநயக் கலையில் தேர்ச்சி பெறாதவரானபடியால், சக்கரவர்த்தியின் வார்த்தைகளைக் கேட்டதும் அவருடைய முகம் சிவந்தது; இதழ்கள் துடித்தன. மற்றவர்கள் கவனியாதவண்ணம் உடனே அவர் திரும்பி, பக்கத்தில் இருந்த சிலைகளையும் சித்திரங்களையும் பார்ப்பவர் போல் இடம் பெயர்ந்து அப்பால் சென்றார்.

சக்கரவர்த்தியும் தாம் இத்தனை நேரம் வீற்றிருந்த சிற்ப சிம்மாசனத்திலிருந்து எழுந்து, ''சிற்பியாரே! எவ்வளவோ முக்கியமான அவசர வேலைகள் எனக்கு இருக்கின்றன. இருந்தாலும், இங்கு வந்துவிட்டால் எல்லாம் மறந்துவிடுகிறது. உமது புதிய சிலைகளைப் பார்த்துவிட்டுச் சீக்கிரம் கிளம்ப வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டே நடந்தார்.

ஆயனரும் சிவகாமியும் அவரைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

மகேந்திரப் பல்லவர், புதிதாகச் செய்திருந்த நடனத் தோற்றச் சிலைகளைப் பார்த்துக் கொண்டே, 'இது கஜஹஸ்தம்', 'இது அர்த்த சந்திர ஹஸ்தம்' என்று சொல்லிய வண்ணமாக நடந்து ஆயனர் கடைசியாகச் செய்து முடித்திருந்த சிலையண்டை போனதும், ''ஆஹா!'' என்று கூறிவிட்டு நின்றார்.






சற்று நேரம் அதை உற்றுப் பார்த்துவிட்டு, ''ஆயனரே! தொண்டை மண்டலத்தில் உள்ள மகாசிற்பிகளுக்குள்ளே உமக்கு நிகரானவர் எவரும் இல்லை. ஆனால் நீர்கூட இத்தனை காலமும் இந்தச் சிலையைப் போல் ஜீவ களை பொருந்திய சிலையைச் செய்தது கிடையாது. அன்பிற்குரியவர் நெடுங்காலம் வராதபடியினால் ஏற்பட்ட இருதய தாபத்தை இந்தச் சிலையின் முக பாவமும், மற்ற அங்கங்களின் தெளிந்த தோற்றமும் எவ்வளவு நன்றாய் வெளியிடுகின்றன? கண்களும், கண்ணிமைகளும், புருவங்களும்கூட அல்லவா நம்மோடு வார்த்தையாடுகின்றன? ஆயனரே! சிவகாமியின் அரங்கேற்றத்திற்குப் பிற்பாடு இந்தச் சிலையைப் பூர்த்தி செய்திருக்கிறீர், இல்லையா?'' என்று கேட்டார்.

''ஆம், பெருமானே! இன்று காலையில்தான் பூர்த்தி செய்தேன். சிவகாமி பெரிய மனசு செய்து இன்றைக்கு எனக்காக மறுபடியும் ஆடி அபிநயம் பிடித்தாள்!''

மகேந்திரர் மந்தஹாசத்துடன் சிவகாமியைப் பார்த்துவிட்டு, ''சிற்பியாரே! பரத சாஸ்திரத்தைத்

தொகுத்து எழுதிய முனிவர் 'ஏழு வகை புருவ அபிநயம்' என்றுதானே சொல்லியிருக்கிறார்? அவர் நமது சிவகாமியின் நடனத்தைப் பார்த்திருந்தால், புருவ அபிநயம் ஏழு வகை அல்ல, எழுநூறு வகை என்று உணர்ந்து அவ்விதமே சாஸ்திரத்திலும் எழுதியிருப்பார்!'' என்றார்.

இவ்விதம் உல்லாசமாகப் பேசிக்கொண்டு சென்ற சக்கரவர்த்தியின் பார்வை சிறிது தூரத்தில் இருந்த ஒரு பிரம்மாண்டமான புத்தர் சிலையின்மீது விழுந்தது. அவ்விடத்திலேயே சற்று நின்று புத்த விக்கிரஹத்தைப் பார்த்த வண்ணம், ''ஆஹா! கருணாமூர்த்தியான புத்த பகவான் பூவுலகத்திலிருந்து ஹிம்ஸையையும் யுத்தத்தை



யும் அடியோடு ஒழிக்க முயன்றார். அவருடைய உபதேசத்தை இந்த உலகில் உள்ள எல்லா மன்னர்களும் கேட்டு நடந்தால், எவ்வளவு நன்றாயிருக்கும்? அவ்விதம் நடந்த புண்ணிய புருஷர் மௌரிய வம்சத்து அசோக சக்கரவர்த்தி ஒருவர்தான். அப்புறம் அத்தகைய அஹிம்ஸாமூர்த்தியான அரசர் இந்த நாட்டில் தோன்றவில்லை!'' என்றார் மகேந்திர வர்மர்.

ஆயனர் மௌனமாக நிற்கவே, சக்கரவர்த்தி, ''நல்லது, சிற்பியாரே! உம்மை இராஜாங்க விரோதியாகப் பாவித்து நியாயமாகத் தண்டிக்க வேண்டும்...'' என்று சொன்னபோது, ஆயனரின் முகத்தில் பெரும் கலவரம் காணப்பட்டது. சக்கரவர்த்தி அடுத்தாற்போல் கூறிய மொழிகள் அந்தக் கலவரத்தை ஒருவாறு நீக்கின.

''ஆமாம்; இங்கு வந்து விட்டு உடனே திரும்ப வேண்டும் என்று எண்ணியிருந்த என்னை இத்தனை நேரம் இங்கே தங்கும்படி வைத்து விட்டீர் அல்லவா? அதனால் எவ்வளவு காரியங்கள் தடைப்பட்டு விட்டன? போகட்டும். இந்தத் தடவை உம்மை மன்னித்து விடுகிறேன்!'' என்று கூறி ஹாஸ்ய நகைப்புடன் மகேந்திரர் வாசலை நோக்கி நடந்தார். மற்றவர்கள் அவரைத் தொடர்ந்து சென்றார்கள்.

வீட்டு வாசற்படியைத் தாண்டியதும் சக்கரவர்த்தி ஆயனரைத் திரும்பிப் பார்த்துக் கூறினார்: ''ஆயனரே! உம்முடைய சிற்பத் திருக்கோயிலுக்கு மீண்டும் நான் எப்போது வருவேனோ, தெரியாது. ஆனால், ஒன்று சொல்லுகிறேன்: பூர்வீகமான இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு ஒரு காலத்தில் அழிவு நேர்ந்தாலும் நேரலாம்...''

''பெருமானே! ஒரு நாளும் இல்லை. அப்படிச் சொல்ல வேண்டாம்!'' என்று ஆயனர் அலறினார்.

''கேளும் சிற்பியாரே! உலகத்தில் இதற்கு முன் எத்தனையோ சாம்ராஜ்யங்கள் இருந்திருக்கின்றன; மறைந்திருக்கின்றன. ஹஸ்தினாபுரம் என்ன, பாடலிபுத்ரம் என்ன, உஜ்ஜயினி என்ன இவையெல்லாம் இப்போது இருந்த இடம் தெரியவில்லை. அதுபோல் இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்துக்கும் ஒருநாள் முடிவு ஏற்படலாம். ஆனால், உம்முடைய கலா சாம்ராஜ்யத்துக்கு ஒரு காலத்திலும் அழிவு கிடையாது. தெய்வத் தமிழ் மொழியும், தமிழகமும் உள்ளவரையில் உம்முடைய சிற்ப சாம்ராஜ்யமும் நிலைபெற்றிருக்கும்!''

அப்போது ஆயனர் உணர்ச்சி ததும்பிய குரலில், ''பிரபு! என்னைப் போல் ஆயிரம் சிற்பிகள் தோன்றுவார்கள்; மறைவார்கள்! எங்களுடைய பெயர்களும் மறைந்தொழிந்து போகும். ஆனால், இந்த நாட்டில் சிற்ப சித்திரக் கலைகள் உள்ளவரைக்கும் தங்களுடைய திருப் பெயரும் குமாரச் சக்கரவர்த்தியின் பெயரும் சிரஞ்சீவியாக நிலைத்திருக்கும்'' என்றார்.

அந்த மகா சிற்பியின் வாக்கு எவ்வளவு உண்மையான வாக்கு! மாமல்லபுரத்தை ஒரு சொப்பன உலகமாகச் செய்த தமிழ் நாட்டு மகா சிற்பிகளின் பெயர்கள் உண்மையில் மறைந்துதான் போய்விட்டன! ஆனால், மகேந்திரப் பல்லவர், நரசிம்ம பல்லவரின் பெயர்கள் சரித்திரத்தில் இடம் பெற்று

இன்றைக்கும் சிரஞ்சீவிப் பெயர்களாக விளங்குகின்றன அல்லவா?

சக்கரவர்த்தியும் அவருடைய குமாரரும் தத்தம் குதிரை மீது ஏறிக்கொண்டார்கள். மகேந்திரர் குதிரைமேல் இருந்தபடியே ஆயனரை மறுபடியும் நோக்கி, "பார்த்தீரா? வெகு முக்கியமான விஷயத்தை மறந்து விட்டேன். நான் வடக்கே கிளம்புவதற்கு முன்னால் மாமல்லபுரத்தில் நடக்க வேண்டிய வேலைகளைப் பற்றி ஆலோசித்து முடிவு செய்ய வேண்டும். நாளைப் பிற்பகல் நீர் துறைமுகத்துக்கு வர வேண்டும்" என்றார்.

"ஆக்ஞை பிரபு! வந்து சேருகிறேன்!" என்றார் ஆயனர்.

போகும் குதிரைகளைப் பார்த்துக் கொண்டு ஆயனரும் சிவகாமியும் வீட்டு வாசலில் நின்றார்கள்.

மகேந்திர பல்லவர் ஆயனர் வீட்டு வாசலுக்கு வந்ததிலிருந்து அவர் திரும்பிக் குதிரை மீது ஏறிய வரையில் அவரும் ஆயனரும் சம்பாஷணை நடத்தினார்களே தவிர, குமார நரசிம்மராவது, சிவகாமியாவது வாய் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஆனால் அவர்கள் தங்களுக்குள்ளே கண்களின் மூலமாகச் சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் பேசிக் கொள்ளவில்லை என்று நாம் சத்தியம்செய்து சொல்லமுடியாது. கடைசியாகச் சிவகாமியிடம் விடை பெற்றுக் கொள்வதற்கும் குமார சக்கரவர்த்தி அந்தக் கண்களின் பாஷையையே கையாண்டார்.

நரசிம்மரின் குதிரை சிறிது தூரம் சென்றதும், அவர் தமது தலையை மட்டும் திருப்பிச் சிவகாமி ஆவல் ததும்பப் பார்த்துக் கொண்டு நிற்பதைக் கவனித்தார். உடனே தம் கையிலிருந்த வேலினை உயரத் தூக்கிப் பிடித்துப் புன்னகை புரிந்தார். மறுகணத்தில் முகத்தைத் திருப்பிக் கொண்டு குதிரையைத் தட்டி விட்டார்.

குமார சக்கரவர்த்தியின் சமிக்ஞையைச் சிவகாமி அறிந்து கொண்டாள். அவளுடைய கண்களும், கண்ணிமைகளும், புருவங்களும் கலீரென்று சிரித்தன.

குதிரைகள் காட்டுக்குள் மறையும் வரைக்கும் சிவகாமி இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். குதிரைகள் மறைந்து சிறிது நேரத்துக்குப் பிறகுதான் அவள் திரும்பி வீட்டுக்குள் செல்ல யத்தனித்தாள்.

நரசிம்மர் வேலைத் தூக்கிப் பிடித்துச் சமிக்ஞை செய்ததை நினைத்து உவகை கொண்ட சிவகாமிக்கு இன்னொரு விஷயம் ஞாபகம் வந்தது. அந்த வேலுக்கு உடையவனை இளைஞன் எங்கே? நரசிம்மர் பல முறை இந்தக் கேள்வியைக் கண்களின் மூலமாகவே கேட்டதையும், தான் மறுமொழி சொல்ல முடியாமல் விழித்ததையும் நினைத்தபோது சிவகாமிக்குச் சிரிப்பு பொங்கிக் கொண்டு வந்தது. தனக்கு முன்னால் வீட்டுக்குள் போய்விட்ட ஆயனரிடம் அந்த வாலிபனைப் பற்றிக் கேட்க வேண்டுமென்னும் எண்ணத்துடன் அவள் உள்ளே புகுந்தபோது, புத்தர் சிலைக்கு அருகில் ஆயனர் செல்வதையும், அந்தச் சிலைக்குப் பின்னாலிருந்து புத்தபிக்ஷுவும் அவருடன் வந்த இளைஞனும் திடீரென்று எழுந்து நிற்பதையும் கண்டாள். அப்போது சிவகாமிக்கு ஏற்பட்ட வியப்பையும் திகைப்பையும் சொல்ல இயலாது.

## இருபதாம் அத்தியாயம்

# அஜந்தாவின் இரகசியம்

சற்று நாம் பின்னால் சென்று, சிவகாமி மனச் சோர்வுடன் மான் குட்டியை அழைத்துக் கொண்டு தாமரைக் குளத்தை நோக்கிப் போன பிறகு, ஆயனர் வீட்டில் என்ன நடந்தது என்பதைக் கொஞ்சம் கவனிக்க வேண்டும்.

தம் அருமை மகளைப் பற்றி, புத்த பிக்ஷு சிறிது விரஸமாகப் பேசியது ஆயனருக்குப் பிடிக்கவில்லை. எனவே, பிக்ஷுவிடம் அவர் பேசுவதை நிறுத்தி விட்டு, பரஞ்சோதியைப் பார்த்து, "தம்பி! உனக்கு என்னால் ஆக வேண்டிய உதவி ஏதாவது இருந்தால் சொல்லு!" என்றார்.

"நாவுக்கரசர் மடத்தில் சேர்ந்து பயிலும் நோக்கத்துடன் காஞ்சிக்கு வந்தேன், ஐயா! சிற்பக் கலை கற்றுக் கொள்ளும் விருப்பமும் இருக்கிறது. தங்களைக் கண்டு தங்கள் கட்டளைப்படி நடந்து கொள்ள வேண்டுமென்று மாமா எனக்குச் சொல்லி அனுப்பினார். ஓலையில் எல்லாம் விவரமாக எழுதியிருந்தார்" என்றான் பரஞ்சோதி.

"ஓலை என்னத்துக்கு, தம்பி? என் அருமைச் சிநேகிதருக்காக நான் எதுவும் செய்யக் கடமைப்பட்டிருக்கிறேன். நாவுக்கரசர் பெருமான் தற்சமயம் காஞ்சியில் இல்லை; ஸ்தல யாத்

திரை சென்றிருக்கிறார். அதனால் என்ன! — நானே நேரில் உன்னை அழைத்துப் போய் அந்தச் சிவநேசரின் மடத்தில் சேர்த்துவிட்டு வருகிறேன். உன்னைச் சக்கரவர்த்தியிடமும் அழைத்துப் போக வேண்டும். வீரச் செயல் புரிந்து எங்களைக் காத்த உன்னைப் பார்த்தால், சக்கரவர்த்தி பெரிதும் சந்தோஷப்படுவார்....."

"அது மட்டும் வேண்டாம், ஆயனரே — இந்த இளைஞனிடம் உமக்கு அபிமானம் இருந்தால்....." என்று புத்தபிக்ஷு குறுக்கிட்டார்.

"ஏன், அடிகளே!" என்று ஆயனர் வியப்புடன் கேட்டார்.

"காஞ்சி சக்கரவர்த்தியின் காராகிருகத்திலிருந்து தப்பி வந்தவர்களுக்கு என்ன தண்டனை என்று உங்களுக்குத் தெரியாதா?"

"ஏன் தெரியாது? — மரண தண்டனைதான்! இந்தக் கேள்வியை எதற்



காகக் கேட்கிறீர்கள் என்றுதான் தெரியவில்லை."

"இவன் சக்கரவர்த்தியிடம் சென்றால் அந்தத் தண்டனைக்கு உள்ளாகும்படி நேரிடும்!"

"சிவ சிவா! — இதென்ன சொல்கிறீர்கள்? இவன் காராகிருகத்தில் இருந்தானா? எப்போது? எதற்காக?"

"உங்களை இவன் தப்புவித்த அன்று இரவு, நகரில் திக்குத் திசை தெரியாமல் அலைந்து கொண்டிருந்தான். இவனை ஒற்றன் என்பதாகச் சந்தேகித்து நகர்க் காவலர்கள் சிறையில் அடைத்துவிட்டார்கள்....."

"அடடா! அப்புறம்?"

"அன்றிரவு இவன் சிறையிலிருந்து தப்பி வந்துவிட்டான்!"

"என்ன? என்ன? எப்படித் தப்பினான்?"

"கூரை வழியாக வெளியே வந்துவிட்டான்....."

ஆயனர் அதிசயத்துடன் பரஞ்சோதியைப் பார்த்தவண்ணம், "ஆகா! என் சிநேகிதருடைய மருமகன் இலேசுப்பட்டவன் இல்லை போலிருக்கிறது! பெரிய கைக்காரனாயிருக்கிறானே! அதனால் பாதகமில்லை, அடிகளே! இவனை நானே சக்கரவர்த்தியிடம் அழைத்துச் சென்று இவனை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். இவன் எங்களைப் பெரும் விபத்திலிருந்து காப்பாற்றினவன் என்று அறிந்தால், சக்கரவர்த்தி கட்டாயம் மன்னிப்பார்" என்றார்.

"உங்களுக்காக மன்னித்துவிடுவார்; உண்மைதான்! ஆனால் இவன் உடனே போர்க்களம் போகும்படி நேரிடும். பல்லவ ராஜ்யத்தில் எங்கே பார்த்தாலும் படை திரட்டுகிறார்கள் என்று தெரியுமோ, இல்லையோ?"

இதைக் கேட்ட ஆயனர் மௌனமாக யோசிக்கலானார். அதைப் பார்த்த பிக்ஷு மேலும் கூறினார்:

"ஒரு தாய்க்கு ஒரு பிள்ளையான இவனுக்குப் போர்க்களத்தில் ஏதாவது நேர்ந்து விட்டால், பாவம், இவன் தாயார் உம்மைச் சபிப்பாள். அது மட்டுமல்ல; தர்மசேனரின் தமக்கையைப் போல் இன்னொரு பெண் கன்னிகையாகக் காலங் கழிக்க நேரிடும்!"

ஆயனருக்குச் சுருக்கென்றது; புத்த பிக்ஷு தம் மகளைத்தான் அவ்விதம் குறிப்பிடுகிறார் என்று அவர் எண்ணினார். ஒருவேளை அவருடைய கூற்றில் ஏதேனும் உண்மை இருக்குமோ? சிவகாமி மூன்று நாட்களாய் ஒருவிதமாக இருப்பதற்குக் காரணம் இந்த வாலிபன் மேல் அவளுடைய மனம் சென்றதாக இருக்கலாமோ? அப்படியிருந்தால் ஒரு விதத்தில் நல்லதுதானே! சிவகாமியை எப்படியும், மணம் செய்து கொடுக்கத்தான் வேண்டுமென்றால், தம் அருமைச் சிநேகிதரின் மருமகனுக்குக் கொடுத்து, அவனைத் தம் சீடனாக்கிக் கொள்ளுதல் நல்லதல்லவா? — இவ்வாறெல்லாம் சில விநாடி நேரத்துக்குள் எண்ணியவராய் ஆயனர் பரஞ்சோதியைச் சற்றுக் கவனமாக உற்றுப் பார்த்தார்.

அவருடைய எண்ணப் போக்கை அப்படியே தெரிந்துகொண்ட புத்த பிக்ஷு, "இல்லை, ஆயனரே! நீங்கள் நினைப்பது போல் நடப்பதற்கில்லை.

இவனுடைய மாமன் மகள் இவனுக்கென்று பிறந்து வளர்ந்து திருவெண்காட்டில் காத்துக் கொண்டிருக்கிறாள்!'' என்றார். இதைக் கேட்ட ஆயனர் புத்த பிக்ஷுவை, ''உமக்கு என் எண்ணம் எப்படித் தெரிந்தது?'' என்று கேட்கும் பாவனையில் ஒரு தடவை பார்த்துவிட்டு, மீண்டும் பரஞ்சோதியை நோக்கி, ''அப்படியா, தம்பி! என் சிநேகிதரின் பெண்ணைக் கட்டிக் கொள்ளப் போகிறாயா?'' என்று கேட்டார்.

பரஞ்சோதி சிறிது நாணத்துடன், ''ஆம், ஐயா!'' என்றான்.

புத்த சந்நியாசி மேலும் சொன்னார்: ''நாவுக்கரசர் மடத்தில் தற்போது இவனைச் சேர்ப்பதும் நல்லதில்லை. காஞ்சிக் கோட்டையை முற்றுகைக்கு ஆயத்தம் செய்து வருகிறார்கள். நாவுக்கரசர் இப்போதைக்கு மடத்துக்குத் திரும்பி வரமாட்டார். அவரைச் சோழ நாட்டுக்கு ஸ்தல யாத்திரை போகும்படியாகச் சக்கரவர்த்தியே சொல்லி அனுப்பி விட்டாராம்.''

''அடிகளே! தங்களுக்கு எத்தனையோ விஷயங்கள் தெரிந்திருக்கின்றன. ஆனால் எனக்கு ஒன்றுமே தெரியவில்லையே!'' என்று ஆயனர் அடங்காத ஆச்சரியத்துடன் கூறினார்.

'' நீங்கள் இந்தக் காட்டுக்குள்ளே வந்து உட்கார்ந்திருக்கிறீர்கள்; அதனால் தெரியவில்லை. நான் நாடெல்லாம் சுற்றுகிறேன் ; அதனால் தெரிகிறது '' என்றார் பிக்ஷு.

ஆயனர் சிறிது யோசனை செய்து, ''தம்பி, இங்கேதான் இப்படியெல்லாம் குழப்பமாயிருக்கிறதே? உன் விருப்பம் என்ன?'' என்று கேட்டார்.

'' ஐயா ! கல்வி கற்றுக் கொண்டு திரும்பி வருகிறேன் என்று என் ஊரில் சொல்லிவிட்டு வந்தேன். ஏதாவது ஒரு கலை பயிலாமல் திரும்பிப் போக எனக்கு விருப்பமில்லை. தங்களிடமே கல்வியும் சிற்பமும் பயில விரும்புகிறேன். கருணை கூர்ந்து என்னைத் தங்களுடைய சீடனாக அங்கீகரிக்க வேண்டும்'' என்றான்.

பரஞ்சோதியின் பணிவான பேச்சைக் கேட்டு ஆயனர் பூரித்தவராய், ''அப்படியே ஆகட்டும்! நீ இங்கேயே இருந்து என்னிடம் சிற்பக் கலை கற்றுக் கொள்!'' என்றார்.

''ஆசாரிய தட்சிணை விஷயம் என்ன? அதை முன்னாலேயே வாங்கிக் கொள்ள வேண்டும், ஆயனரே!'' என்று பிக்ஷு கூறியதும் அவர் பரிகாசமாய்ச் சொல்வதாய் எண்ணி ஆயனர் நகைத்தார்.

'' நான் வேடிக்கை பேசவில்லை. உண்மையாகத்தான் சொல்லுகிறேன். பரஞ்சோதி உங்களுக்கு அளிக்க வேண்டிய குருதட்சிணை அஜந்தா சித்திர இரகசியந்தான்!'' என்று பிக்ஷு கூறினாரோ இல்லையோ, ஆயனரின் முகத்தில் ஏற்பட்ட ஆவலையும் பரபரப்பையும் பார்க்க வேண்டுமே! அந்த க்ஷணத்தில் அவர் புதிய மனிதராக மாறி விட்டதாகத் தோன்றியது.

'' அடிகளே ! முன்னமே அதைப் பற்றிக் கேட்டேன்; தாங்கள் சொல்லவில்லை. ஆனால், இந்தப் பிள்ளைக்கும் அஜந்தா சித்திர இரகசியத்துக்கும் என்ன சம்பந்தம் ? இவனால் என்ன செய்ய முடியும் ?'' என்று ஆயனர் கேட்டார்.

'' நாகார்ஜுன மலையில் உள்ள புத்த சங்கராமத்துக்கு அந்த இரகசியம் வந்திருக்கிறது. அவ்விடத்துக்கு



யாரையாவது அனுப்பி வாங்கி வரச் சொல்ல வேண்டும். உம்முடைய புதிய சீடனைப் போல் அந்தக் காரியத்துக்குத் தகுதியான ஆளைக் காண முடியாது.''

''நாகார்ஜுன மலையா? கிருஷ்ணா நதிக் கரையில் அல்லவா இருக்கிறது ? வழியில் எவ்வளவோ அபாயங்கள் ஏற்படுமே ?''

'' அபாயங்களையெல்லாம் கடந்து போய் வரக்கூடிய வீரனாகையால்தான் பரஞ்சோதியைச் சொன்னேன். இந்தப் பிள்ளை யானை மேல் வேலை எறிந்த விதத்தைத்தான் கண்ணால் பார்த்தீரே....?''

'' ஆனாலும், வெகுதூரம் இருக்கிறதே ? இவனால் கால்நடையாகப் போய்விட்டு வர முடியுமா?''

''முடியாது. நல்ல குதிரை ஒன்று இவனுக்கு வாங்கித் தர வேண்டும். குதிரை மட்டும் இருந்தால் ஒரு மாத

காலத்தில் காரியத்தைச் சாதித்துக் கொண்டு திரும்பி விடலாம்.''

ஆயனர் மிக்க ஆவலுடன் பரஞ்சோதியைப் பார்த்து, ''தம்பி! உன்னால் முடியுமா? போய் வருகிறாயா?'' என்று கேட்டார்.

பரஞ்சோதி பரக்க விழித்தவண்ணமாய், ''ஆகட்டும் ஐயா! தங்கள் கட்டளை எதுவானாலும் நிறைவேற்றக் காத்திருக்கிறேன். ஆனால் எங்கே போக வேண்டும், எதற்காக என்பது ஒன்றும் எனக்குத் தெரியவில்லை!'' என்றான்.

''உண்மைதான்! இவனுக்கு விவரம் ஒன்றும் தெரியாதல்லவா? தாங்களே சொல்லுங்கள், சுவாமி!''

இவ்விதம் ஆயனர் கூற, புத்த சந்நியாசி பரஞ்சோதியைப் பார்த்துச் சொன்னார்: ''கேள், அப்பனே! வடக்கே வெகுதூரத்தில், கோதாவரி நதிக்கும் அப்பால் அஜந்தா என்ற மலை இருக்கிறது. வெகு காலத்துக்கு முன்னால் அந்த மலையைக் குடைந்து புத்த சைத்தியங்களை அமைத்திருக்கிறார்கள். அந்தச் சைத்தியங்களில் புத்த பகவானுடைய வாழ்க்கையையும், அவருடைய பூர்வ அவதாரங்களின் மகிமையையும் விளக்கும் அற்புதமான சித்திரங்கள் வரையப்பட்டிருக்கின்றன. ஐந்நூறு வருஷங்களுக்கு முன்னால் வரைந்த அந்த ஓவியங்கள் இன்றைக்கும் வர்ணம் அழியாமல் புதிதாய் எழுதினவை போலவே இருக்கின்றன. அந்த அற்புதச் சித்திரங்களை எழுதிய சித்திரக் கலை மேதாவிகளின் சந்ததிகள் இன்னமும் அங்கே இருக்கிறார்கள். அவர்கள் அஜந்தா குகையில் பழைய சித்திரங்களுக்குப் பக்கத்தில் புதிய சித்திரங்களை வரைந்து வருகிறார்கள். ஆயிரம் வருஷங்கள் ஆனாலும் அழியாமல் இருக்கக் கூடிய வர்ணச் சேர்க்கையின் இரகசியம் அவர்களுக்குத் தெரியும். அந்த இரகசியத்தை அறிந்து தமக்குச் சொல்ல வேண்டும் என்று ஆயனர் என்னை வெகு நாட்களாகக் கேட்டுக் கொண்டிருக்கிறார். நானும் முயற்சி செய்து வந்தேன். அந்த இரகசிய முறையை அறிந்த அஜந்தாச் சித்திரக்காரர் ஒருவரை எனக்குத் தெரியும். நாகார்ஜுன மலையிலுள்ள புத்த சங்கராமத்தில் இப்போது அவர் இருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. நீ போனாயானால் அந்த இரகசியத்தை அவரிடம் அறிந்து கொண்டு வரலாம்.''

பிக்ஷு இவ்விதம் சொல்லி நிறுத்தியதும், ஆயனர், ''தம்பி! நீ போய் வருகிறாயா? போய் அந்த இரகசியத்தைக் கொண்டு வந்தாயானால் என் வாழ்க்கை மனோரதங்களில் ஒன்றை நிறைவேற்றியவனாவாய். ஆனால், உன்னை நான் வற்புறுத்தவில்லை!'' என்றார்.

பிக்ஷுவும் ஆயனரும் பேசி வந்தபோது பரஞ்சோதியின் உள்ளத்தில் விதம்விதமான கிளர்ச்சிகள் உண்டாகி மறைந்து வந்தன. அவை பெரும்பாலும் குதூகலக் கிளர்ச்சிகளாகத்தான் இருந்திருக்குமென்று நாம் சொல்ல வேண்டியதில்லை; நல்ல ஜாதிக் குதிரை மேல் ஏறி நெடுந்தூரம் பிரயாணம் செய்வது என்ற எண்ணமே அவனுக்கு உற்சாகத்தை உண்டாக்கிற்று; அதனோடு இவ்வளவு முக்கியமான ஒரு காரியத்துக்காக ஆயன மகா சிற்பியினால் ஏவப்பட்டு யாத்திரை போகிறதென்பது அவனுக்கு மிக்க பெருமை உணர்ச்சியையும் அளித்தது. எழுத்தாணியால் ஏட்டில் எழுதிக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் காட்டிலும் இம்மாதிரி காரியந்தான் அவனுடைய இயல்புக்கு ஒத்தது என்பதை நாம் அறிவோமல்லவா?

''ஐயா! தங்களுடைய விருப்பம் எதுவோ, அதன்படி நடந்து கொள்ளுமாறு என் மாமா சொல்லியிருக்கிறார். தாங்கள் போகச் சொல்லிக் கட்டளையிட்டால் அப்படியே போய் வருகிறேன்'' என்றான்.

அப்போது நாகநந்தி அடிகள், ''தாமதிக்க நேரமில்லை, ஆயனரே! வாதாபிப் படைகள் காஞ்சிக்கு வருவதற்குள் இவன் போய் வந்தால் நல்லது. குதிரைக்கு என்ன ஏற்பாடு?'' என்று கேட்டார்.

''அது ஒன்றும் கஷ்டமில்லை. சக்கரவர்த்தியிடம் விண்ணப்பித்துக் குதிரை வாங்குகிறேன். அஜந்தா வர்ணச் சேர்க்கை இரகசியத்தை அறிந்து கொள்வதில் எனக்கு எவ்வளவு ஆசையோ, அவ்வளவு ஆசை மகேந்திரச் சக்கரவர்த்திக்கும் உண்டு.''

''அப்படியானால், சக்கரவர்த்தியிடம் பிரயாண அநுமதி இலச்சினையும் வாங்கி விடுங்கள். யுத்த சமயமானதால், பரஞ்சோதி போகும் வழியில் ஏதாவது இடையூறு ஏற்படலாம்.''

''உண்மைதான், இலச்சினையும் வாங்கி விடுகிறேன்.''

''இதில் என்னைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே வேண்டாம். பௌத்த சமயிகள் விஷயத்தில் சக்கரவர்த்தியின் மனோபாவந்தான் உங்களுக்குத் தெரியுமே!''

புத்தபிக்ஷு இவ்விதம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே தூரத்தில்

பேரிகை முழக்கமும் சங்கநாதமும் கேட்டன.

"அடிகளே! கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வருகிறது! இதோ மகேந்திர சக்கரவர்த்தியே வருகிறார்!" என்று குதூகலத்துடன் கூறினார் ஆயனர்.

நாகநந்தி அடிகளின் கடுகடுப்பான முகத்தில் புன்னகை தோன்றியது. அவர் சிறிது யோசித்தவண்ணமாய் அங்குமிங்கும் பார்த்தார். பிறகு ஒரு முடிவுக்கு வந்தவரைப் போல், "ஆயனரே, நல்ல சகுனந்தான். இந்தச் சமயத்தில் இவ்விடம் சக்கரவர்த்தியே விஜயம் செய்வதானது நமது காரியம் ஜயமாகப் போகிறதென்பதற்கு அறிகுறி. ஆனால், நானும் பரஞ்சோதியுந்தான் இச்சமயம் பூஜை வேளையில் கரடிகளாக இருக்கிறோம். எங்களைச் சக்கரவர்த்தி பார்த்துவிட்டால் எல்லாக் காரியமும் கெட்டுவிடும். சக்கரவர்த்தி வந்துவிட்டுப் போகும் வரையில் நாங்கள் புத்த பகவானைச் சரணடைகிறோம். புத்த பகவானுடைய சிலையை எப்போதும் பெரிதாகச் செய்ய வேண்டுமென்று ஏற்படுத்திய மகாபுருஷர் நாகார்ஜுன பிக்ஷுவின் தீர்க்க திருஷ்டியை என்னவென்று புகழ்வது?" என்றார்.

ஆயனர் தயங்கி, "ஒருவேளை தெரிந்து விட்டால்...?" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது பிக்ஷு பரஞ்சோதியின் கையைப் பிடித்து அழைத்துச் சென்று புத்தர் சிலையின் பின்னால் மறைந்து கொண்டார்.

இதற்குள் குதிரைகளின் காலடிச் சத்தம் நெருங்கிவிடவே, ஆயனருக்கு யோசிப்பதற்கே நேரமில்லாமல் போயிற்று. "ஜாக்கிரதை, அடிகளே!" என்று சொல்லிவிட்டுச் சக்கரவர்த்தியை வரவேற்பதற்காக விரைந்து வாசற்பக்கம் சென்றார்.

*   *   *

சக்கரவர்த்தியும் குமாரரும் விடைபெற்றுச் சென்றபிறகு வீட்டுக்குள் நுழைந்த சிவகாமிக்கு, புத்தர் சிலைக்குப் பின்னாலிருந்து நாகநந்தியும் பரஞ்சோதியும் கிளம்பியது மிக்க வியப்பை அளித்தது என்று சொன்னோம் அல்லவா? ஆனால், அதே காட்சியானது ஆயனருக்குச் சிறிதும் வியப்பை அளித்திராது என்பதை மேலே கூறிய விவரங்களிலிருந்து வாசகர்கள் அறிந்து கொண்டிருப்பார்கள்.

எனினும், சிவகாமியைக் காட்டிலும் ஆயனரிடத்திலேதான் பரபரப்பு அதிகமாகக் காணப்பட்டது.

"அடிகளே! நல்ல வேளையாய்ப் போயிற்று. எப்பேர்ப்பட்ட அபாயத்திலிருந்து தப்பினோம்?" என்றார் ஆயனர்.

"புத்த பகவானைச் சரணமாக அடைந்தவர்களுக்கு அபாயமே கிடையாது. இருக்கட்டும். அசுவமேதயாகத்தில் குதிரையை மறந்து போன கதையாக, நீரும் சக்கரவர்த்தியிடம் குதிரை கேட்க மறந்துவிட்டீரல்லவா?" என்றார் புத்தபிக்ஷு.

"மறக்கவில்லை, அடிகளே! இந்த இடத்துக்கு வந்ததும் சக்கரவர்த்தி கூறிய வார்த்தை என்னைக் கதி கலங்கச் செய்துவிட்டது. அப்புறம் குதிரையைப் பற்றிக் கேட்க எனக்கு நா எழவில்லை!"

"ஆமாம்; சக்கரவர்த்தி இராஜாங்கத் துரோகத்துக்காக உம்மைத் தண்டிக்கப்



போவதாகச் சொன்னபோது எனக்குக் கூட ஒரு கண நேரம் தூக்கிவாரிப் போட்டுவிட்டது!"

பிக்ஷுவும் பரஞ்சோதியும் புத்தர் சிலைக்குப் பின்னாலிருந்து வெளியே வந்தவுடன், மூன்று பேரும் ஏற்கனவே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த இடத்துக்கு வந்து அமர்ந்தார்கள். அப்போது சிவகாமியும் அந்த இடத்துக்கு வந்து சேரவே, புத்தபிக்ஷு அவளை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, "சிவகாமியிடம் நீங்கள் எல்லா விவரங்களையும் சொல்ல வேண்டும். எங்களை ஏதோ பேயோ பிசாசோ என்று அவள் சந்தேகிக்கிறாள் போலிருக்கிறது!" என்றார்.

(தொடரும்)

# மல்லிகை மல்லிகைதான்

## 'மஹி'

**ப**க்கத்து வீட்டு மல்லிகைப் பந்தரை யாரோ ஓர் ஆள் வெட்டி அவிழ்த்துக் குப்பை யாக்கிக் கொண்டிருந்தான். நான் ஈஸிச் சேரில் சாய்ந்தபடியே ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். அடடா! எத்தனை பூக்கள் பூத்துக் குலுங்கிய பந்தல். மணிவாசகன் எத்தனை ஆசை பாசத்துடன் நட்டு, தினசரி பார்த்துப் பார்த்து மகிழ்ந்த மல்லிகைப் பந்தல்! 'மனைவியின் பெயர் மல்லிகா என்பதற்காக மல்லிகையிடம் இத்தனை பாசம் ஏற்பட்டு விட்டதா?' என்று நான் கூடக் கேலி செய்வதுண்டு. அதையும் சிரித்துச் சமாளித்து மகிழும் மணிவாசகனின் உயிர் இன்று குப்பையாகிச் சுருட்டி எறியப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஏன்? மல்லிகை பயன் உடைய கொடி அல்லவா? யாருக்குத் தெரியும்?

''பூஷணி...'' என்று கூவி என் மனைவியை அழைத்தேன்.

''ஏனும்...'' என்ற தனது நிஷ்டூரத்துடன் வந்து நின்றாள் மனைவி பூஷணி.

''பக்கத்து வீட்டைப் பார்த்தியா? மல்லிகைப் பந்தல்...''

''ம்...மல்லிகாவே போயிட்டா. இனிமே இந்தப் பந்தல் போனா என்ன?'' என்று அலுத்துக் கொண்டாள் பூஷணி.



''மல்லிகாம்மாவும் போயிட்டாங்க. அவுங்க புருஷனும் எங்கேயோ போயிட்டாரு. ம்... வீடும் இப்படிப் பாழடைஞ்சு போச்சு...''

''எப்பிடி ஆயிடுச்சு. இத்தினி நாளும் வீடு பாழடைஞ்சு கிடந்தது. இப்ப யாரோ உரிமைக்காரங்க வந்து சீர் பண்ணி வெளக்கு ஏத்த வராங்க.''

''அப்போ மல்லிகாவுக்கோ மணிவாசகத்துக்கோ, இங்கே அவுங்க வாழ்ந்த வாழ்வுக்கோ என்னத்தை அடையாளம் இருக்குது? அவுங்க அன்புக்கு அடையாளமா இருந்த மல்லிகைப் பந்தலும் இதோ போயிடுச்சு.''

''ஆமாம். ஒங்களுக்கு எப்பப் பார்த்தாலும் பக்கத்து வீட்டிலேயே கண்ணு. முந்தி மல்லிகாவைப் பார்த்துப் பெருமூச்சு விடுவீங்க. இப்ப மல்லிகைப் பந்தலைப் பார்த்துப் பொருமுறீங்க...'' என்று சொல்லித் தோளில் முகத்தை இடித்துக் கொண்டாள் குண பூஷணி.

''ஏன், நீ மட்டும் என்னவாம்? மல்லிகா ஒண்ணு பூட்டிக்கிட்டா, ஒண்ணைப் பூண்டுக்கிட்டாப் பெருமூச்சு விடுவே. என்னைச் சாடுவே.''

''ஆமாம். வாழ்ந்தா அவ மாதிரி வாழ்ந்துப்பிட்டு அவமாதிரி சாகணும். நானும் இருக்கேனே. கட்டின தாலிக் கயிற்றை மட்டும் சொமந்துக்கிட்டு....''

''ஒனக்கு அவ வாழ்விலே அவ வனத்திலே கண்ணு. நான் அவளோட இங்கிதம், நாகரீகம், ஒடம்பைச் சீரா வைச்சுக்கிட்ட நிதானம் இதைப் பார்த்து, மணிவாசகத்தின் அதிர்ஷ்டத்திலே பெருமூச்சு விட்டேன். எதுக்கும் பெண்டு பாக்கியம் இருக்கணும்'' என்று சொல்லிப் பெருமூச்சு விட்டேன்.

''ஒங்களுக்குப் பெண்டு பாக்கியம் இல்லாதது இந்த அறுபது வயதிலேயாவது தெரிந்தது. எனக்கு வந்த அன்னிக்கே தெரிஞ்சு போச்சு. கண்ணு நெறைஞ்ச கணவனைக் காட்டிலும் கைநெறஞ்ச நகைபகை இல்லாத சப்பிட்ட வாழ்வுதான்னு வூட்டுக்குள்ளார அடியெடுத்து வெச்சப்பவே தெரிஞ்சு போச்சு.''

''கை நெறைஞ்ச நகைதானா வாழ்வு? உன் கையும் கனத்துது. வீடும் நெறைஞ்சுது.''

''ஆமாம்... ஒண்ணு நடக்கத்துக்குள்ளார இன்னொன்று கையிலே வவுத்துலே கனத்தது. இப்ப எல்லாத்தையும் தூர வெரட்டிப்பிட்டு நீயும் நானுமடி எதிரும் புதிருமடின்னு ஒக்காந்தாச்சு...''

''ஏன், இந்த வாழ்வுக்கு என்னடி பூஷணி? நிறைஞ்ச வாழ்வு! போன மாசம் எனக்கு மஞ்சக் காமாலை வந்ததுன்னு தெரிஞ்ச ஒடனே நாலா தெசையிலே யிருந்தும் உன் பிஞ்சுகள் வந்து உனக்கு தெகிரியம் தரல்லே? இது போதாதாடி. எது எங்கே இருந்தா என்ன? எல்லாப் பட்சிகளும் தாய்ப் பறவையை அடை காத்துக்கிட்டுல்ல இருக்குதுங்க...''

**நி**தர்சனங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும் போது அதைப் பார்த்தபடியே காலையைக் கண்டு மனத்தைப் பறிகொடுக்கும் சராசரி வர்க்கத்தைச் சேர்ந்தவள் குணபூஷணி. பேர் என்னவோ குணபூஷணிதான். குணத்துக்குக்

குறைவில்லை. என்னுடைய வறுமையை, வாழ்வை, அன்பை, அலைப்பை ஏன், அடி உதை ஆகிய அனைத்தையுமே தாங்கி, என் பலவீனங்களுக்குப் பணிந்து, பயந்து பயந்தே ஐந்து குழந்தைகளுக்குத் தாயாகித் துவண்டவள். அழகை அஞ்சு பாகம் ஆக்கிப் போட்டுவிட்டு மீந்த எச்சம், சொச்சமாக முகத்தில் நின்று முன் மயிரை நரைக்க வைத்திருந்தது.

நானும் அடுத்த வீட்டு மணிவாசகனும் ஒரே பாங்கில்தான் வேலை செய்தோம். ஒரே சமயம் நிலம் வாங்கினோம். ஒரே தொகைதான் கடன் வாங்கினோம். ஒரே மாதிரிதான் வீட்டைக் கட்டினோம். ஒரே மாதிரியான சம்பளத்தில் ஒரே விழுக்காடு விகிதத்தில் தான் கடனுக்காகப் பிடித்தம் விழுந்து கிட்டத்தட்ட ஒரே தொகையைத்தான் ஒவ்வொரு மாதமும் வீட்டுக்குக் கொண்டு வருவோம். ஆனால்...

மணிவாசகன் வீட்டில் ஆண்டுக்கு ஒரு நகை. பலவகையான புடவைகள். அடுத்த அடுத்த வீடுகள். ஒரே நிலை. ஒரே வாழ்வு. இதில் என் வீட்டுக்கு மட்டும் வறுமை ஏன் வந்து புகுந்து கொண்டது என்பது குணபூஷணியின் வாதம். அது என்னுடைய கையாலாகாத்தனம் என்பது அவள் கணிப்பு.

இந்த ஏற்றத் தாழ்வுக்குக் காரணம்? எங்கோ தவறு இருந்தது. அதை விதி என்று சொல்லி ஒதுக்கக்கூடவில்லை. மணிவாசகனின் வள வாழ்வின் காரணம் என்னவென்று கூர்ந்து நோக்க ஆரம்பித்தேன். குணபூஷணியும் ஜன்னல் வழியாக மல்லிகாவின் பகட்டான உலகத்தைக் கண்டு உருகினாள். வறண்ட மனத்தின் சிந்தனையற்ற முடக்கு வாதம் அவளுடையது. என்னுடைய கூர்மையான ஆராய்ச்சி நோக்கு அவளுக்குத் தப்பாகப் புரிந்தது. நான் என்ன செய்வது?

''மல்லிகாவின் புருசன் இன்னிக்கி ஒரு நெக்லெஸ் வாங்கியாந்திருக்காங்க. காட்டினா; நல்லாயிருந்திச்ச...'' என்று மத்தியானம் பூஷணி கோடி காட்டிய பேச்சில் நான் சிரத்தை காட்டாதிருந்தது இருட்டில் பிரதிபலித்தது. நான் சிரத்தை காட்டி என்ன செய்வது? நெக்லெஸ் என்பது மல்லிகைப்பூ அல்லவே, பந்தலில் பறிக்க. அதற்கு எனது ஓராண்டு வருவாய் அல்லவா பலியாக வேண்டும்? ஓராண்டு வருவாயை இவள் கழுத்தில் தொங்கவிட்டால்.... எங்கள் ஏழு வயிற்றுப் பள்ளம் தொங்கிவிடுமே? அத்துடன் ஏழு மனித மாமிசத்தின் மானம் மூடப்பட வேண்டுமே? இது பூஷணிக்குத் தெரியாதது அல்ல. இருந்தாலும் ஐந்து என்ற அபாய எல்லை கடக்கும் விளைவைத் தடுக்க முடியாவிட்டாலும், குத்திக் காட்டுவதில் இன்பம் கண்டாள். அவள் இன்பத்தை நாம் கெடுப்பா



னேன்? கழுத்தில் தாலியுடன்கூடிய மஞ்சள் கயிறுதான் அவளுடைய எல்லாம் என்ற நிலையில், அந்தத் தாலித் தொங்கலின் ஆதார கருநியான என்னைத்தானே அவள் எதற்கும் சார்ந்திருக்க முடிந்தது.

அப்படிப்பட்ட இருட்டுத் தவிப்பில் ஒரு நாள், பக்கத்து வீட்டு ஜன்னல் வெளிச்சம், விழைவைத் தடுக்கவும், எங்கள் பார்வை மணிவாசகத்தின் வீட்டுப் பக்கம் நகர்ந்து ஜன்னலை ஊடுருவின. அங்கே நாங்கள் கண்ட காட்சி! எங்கள் நிலைக்கு நேர் எதிரிடை. அங்கே இருட்டில்லை. பயம் இல்லை. தனிமையின் துணையுடன் 'ஏ' சர்ட்டிபிகேட் படக் காட்சியைத் தோற்கடிக்கும் அளவுக்கு நிகழ்ந்துகொண்டிருந்தது. வீடு முழுதும் நாம் தானே என்ற துணிவும், இரவும், தனிமையும் சேர்ந்து அவர்களின் அந்தரங்கம் திறந்த புத்தகமாகப் படிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. பூஷணி பெருமூச்சுவிட்டாள். விம்மினள். இப்படிப்பட்ட ஒளிக் காட்சியான வாழ்வு அவளுக்குக் கிடைக்கவில்லையே. பளபளப்பான பகட்டு வாழ்க்கையுடன்கூடிய நிர்ப்பயமான நிகழ்வுகள் அவளுக்குக் கிடைக்கக் கூடியவை அல்லவே.

நான் என்ன செய்வது? நானும் மணிவாசகனா? அல்லது பூஷணிதான் மல்லிகாவா? இரண்டும் இல்லை. நாங்கள் பெற்றோர். பெற்றோரின் கடமைகள், கவனங்கள், பயங்கள், பாசங்கள் எங்களை அழுத்தின. அதன் அழுத்தத்தில் கரைந்து உறைவதுதான் கடமை. அத்துடன் பிஞ்சு நெஞ்சங்களின் எதிரில் நாங்கள் கணவன் மனைவி அல்லர். நான் அப்பா, அவள் அம்மா. என்றும் வணக்கத்துக்கு உரிய ஸ்தானத்தில் உள்ளவர்கள்.

'ஒரு நாளாவது மல்லிகாவாக வாழ்ந்துவிட்டுச் சாகணும்' என்பது பூஷணியின் ஜபமாகிவிட்டது. ''அப்படி என்னடி சுவர்க்க வாழ்வு? அவுங்களுக்குன்னு வந்து வாய்ச்சுட்டுது. கொள்ளி போடப் பிள்ளையில்லே. கழுவிக் குளிப்பாட்டப் பொண்ணு இல்லே.''

''ஆமாம், நாம போனப்புறம் அதையெல்லாம் பார்க்கப் போறோமா! புள்ளையும் கொள்ளியும் மட்டும் இருந்தாப் போதுமா? பித்தளைத் தோடும் அடுக்குத் தாலியும் போட்டுண்டு நின்னு ஏங்கறதைவிட புள்ளே குட்டியில்லாமே நின்னுக்கூடத் தேவலே.''

''இதப்பாரு எப்பப் பார்த்தாலும் நகை நகைன்னு உயிரை விடறியே. மனுசனுக்கு நகைதான் பூரணமான வாழ்வா?''

''பூரணமோ, ஜீரணமோ, மல்லிகா புருசனும் ஒங்க ஆபீசிலேதான் இருக்காங்க. ஒங்க சம்பளம்தான் வாங்கறாங்க. அவுங்களாலே முடிஞ்சது ஒங்களாலே முடியல்லியே.''

''ஆமாம்; அவனாலே பண்ண முடிஞ்ச நகை என்னாலே பண்ணிப் போட முடியல்லே. நிசம்தானு? ஆனா அவனாலே மல்லிகாவைத் தாயாக்க முடியல்லியே....!''

''ஆமாம். எப்பப் பார்த்தாலும் இந்தப் பெருமைதான் ஒங்களுக்கு. பெத்தவங்க எல்லாம் இப்படித்தான் மூளியா நிக்கணுமா?''

''பெத்துக்கிட்டதுனாலேதான் இந்த நெலமை. இல்லாட்டி நீயும் நானும் எதிரும் புதிருமடி நீயும் நானுமடின்னு நின்னு. செலவு ஏது? ஆழாக்கு அரிசியைக் கொதிக்க வெச்சு மோருஞ் சோறுமாத் தின்னுப்புட்டுக் காசைச் செலவு பண்ண வழி தெரியாமெ நகையாப் பூட்டிக்கலாம். பூஷணி ஒவ்வொரு பிரசவத்துக்கும் உன்னை ஆசுபத்திரியிலே சேர்த்து வைத்தியம், மருந்து, அது, இதுன்னு முந்நூறு ரூவா ஆகிக்கிட்டு வந்திருக்குது. அஞ்சு பிரசவத்துக்கு ஆயிரத்து ஐந்நூறுன்னு ரெட்டை வடம் சங்கிலி ஆச்சு. ஒவ்வொரு கொழந்தைக்கும் ரெண்டு வயசு வரைக்கும் புட்டிப் பால் வாங்கினது இருநூறு ரூவான்னே வெச்சாலும் அஞ்சுக்கு ஆயிர ரூவா..... நெக்லெஸ்......''

''சரி சரி, ஒங்க கணக்கு மூளையைப் பாங்கிலேயே வெச்சுக்குங்க. நகைங்களுக்குப் பதிலாப் புள்ளைங்களைக் கோத்து மாலை போட்டுக்கறதா?'' என்பது குணபூஷணியின் ஒரேயடியான வாதம்.

''ஒன்னைவிட ஒம்பிள்ளை ஒசந்து நிக்கறதை அண்ணாந்து பார்த்துப் பேசற பெருமைக்கு என்னடி ஈடு?''

''ஆமாம்..... புள்ளே.... பொண்ணு... ஒங்களுக்கு இதைவிட்டா வேறே என்ன

பவுடரினுல் துலக்கிய பாத்திரத்தின்மீது
துலக்கிய பின்னும் பிசுக்கு
ஒட்டியிருக்கிறதா?



# மாசில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்.




*பிசுக்கு இல்லே!*
*கசடு இல்லே!*
*கீறல் இல்லே!*

[illegible] 140 TA

[illegible] லீவரின் தரமான தயாரிப்பு

# சிந்தால் வாக்குறுதி...

மேனியெழிலுக்கு முழுப் பராமரிப்பு

புதுமை குன்றாத நறுமணம்

துர்நாற்றத்திலிருந்து சிறந்த பாதுகாப்பு

## ...சிந்தால் மட்டுமே நிறைவேற்றக்கூடியது




ஜி-11 அடங்கிய ஒரே சோப் சிந்தால். இந்த அற்புத கிருமி நாசினி உடல் துர்நாற்றத்திற்கும் சருமக்களங்கத்திற்கும் காரணமாக விளங்கும் கிருமிகளை அழித்து விடுகிறது. இவ்வாறு சிந்தால் உங்கள் மேனியெழிலை அப்பழுக்கின்றி வைத்திருப்பதுடன், உங்களை நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைத்திருக்கிறது.

Interpub/GSC/5/72R Tam

தெரியும் ?'' என்று என்னைக் குத்திக் காட்டியே வாழ்ந்துவிட்டவள் குணபூஷணி. இன்று நாங்கள் தனித்து வாழ்கிறோம். இத்தனை பெரிய வீட்டில் நாங்களே நாங்கள்தாம். தனிக் குடித்தனப் பாங்குதான். பிள்ளைகள் மூவரும் திக்குக்கு ஒருவராகச் சென்று வேலை செய்கிறார்கள். பெண்களையும் கட்டிக் கொடுத்து அனுப்பியாயிற்று. ஏதோ பிராவிடெண்ட் பண்ட் தொகைக்கு வட்டி வருகிறது. வாழ்ந்து வருகிறோம். ஆனால்....

மல்லிகா... மணிவாசகன்....!

அவர்கள் வாழ்வைச் சுவைத்து வாழ்ந்தார்கள். அவர்கள் வாழ்வு மல்லிகையாக மணந்தது. உடற்கட்டு மாறாத நெடியடிக்கும் இளமை. பொருள் கூடியது. பிணையலாய் வாழ்ந்தார்கள். இருந்தாலும் மணிவாசகனின் ஏக்கமோ ?

'' என்ன ஸார், பண்றது ? நல்லா இருந்து மட்டும் என்ன பிரயோசனம்? வீட்டுக்கு வந்தா நான் அவளைப் பார்க்க என்னை அவள் பார்க்கறதுன்னுதானே நெலை '' என்று நெட்டுயிர்ப்பார். அந்தக் கவலைக்கு மருந்து ஏது? காசியில் ராமேசுவரத்தில், அரச மரத்தடியில், அர்ச்சனைகள், சாந்திகள் எதிலும் மருந்து கிட்டவில்லை. வைத்தியப் பரிணாமத்தின் பெரியல் கலவைகளோ, அறுவைத் துறையின் அபூர்வங்களோ பயன் படாதா? இந்த ஏக்கமே அவர்களை மிக அதிகமாகக் கணவன் மனைவியாக்கியிருக்க வேண்டும். இணை பிரியாத ஜோடி புறாப் போலச் சேர்ந்து சேர்ந்து நடப்பார்கள். புனுகுப் பூனைபோல் உரசிக் கொண்டு வாழ்ந்தார்கள். ஆனால் ரேடியோவுக்குப் பிளக் செருகுகையில் ஷாக் வாங்கி மல்லிகா மல்லிகையாய் வாடித் துவண்டு நீண்டு விட்டாள். வயது நாற்பது. நோக்காடு இல்லாத திமர்ச் சாவு காரணமாக மூளை மழுங்காத இளமைப் பொலிவுடன் நீட்டி நிமிர்ந்து கிடந்தாள் மல்லிகா. எங்களுக்கே பார்க்க என்னவோ செய்தது. மணிவாசகன் என்ன செய்வார்? பாவம்!.... கதறினார் ; என்ன பயன்? மல்லிகையின் வாழ்வு அவ்வளவுதான். அவள் இருந்த அடையாளம்கூட இல்லை.

அதன் பின்னர் ரிடையர் ஆகச் சில ஆண்டுகள் பாக்கியிருந்தன. இந்த நிலையில் பல்லைக் கடித்துக்கொண்டு பைத்தியக்காரரைப்போல் மணிவாசகன் வளைய வந்தார். பிறகு ஒருநாள் வாலண்டரி ரிடையர்மெண்டுக்கு எழுதிக் கொடுத்துவிட்டு, ஆள் போயே போய்விட்டார். பூட்டிச் சென்ற வீடு பூட்டியே கிடந்தது. புதர் மண்டிக் கிடந்தது. வீடு பாழாகின கோலம் தந்து கொண்டிருந்தது.

அந்த வீட்டுக்கு இன்று விடிவு காலம். யாரோ வந்து வீட்டைத் துப்புரவாக்கி விளக்கேற்றப் போகிறார்கள்.

''யாரு வர்றாங்களாம்......'' என்றேன்.

''யாராயிருந்தால் என்ன? என்னவோ மல்லிகாவுக்குத் தூரத்து உறவாம். தம்பியோட மகனும். அவனுக்குத்தான் உரிமையாம். கோர்ட்டுலே ஆன தீர்ப்பாம்.... வர்றாங்க.....'' என்றாள் பூஷணி. நான் நெருமூச்சுவிட்டேன். மல்லிகாவின் வயிற்றில் பிஞ்சு விட்டிருந்தால்...?

வீட்டின் கொல்லைப்புறம் போன குணபூஷணி, ''இந்தாங்க..... இங்கே வந்து பாருங்க'' என்று கத்தவும், என்னவோ ஏதோ பாம்பு, தேளாக்கும் என்று ஓடினேன்.

'' நாம்பளாப் பயிர் செய்யாத, ஆனா தானா மொளைச்சுப் படர்ந்த பூசணிக் கொடியிலே..... ஒரு மொதல் பிஞ்சுப் பூ விட்டிருக்குது'' என்று குதித்தாள் பூஷணி. ''அது பூசணிக் கொடியின் இயற்கைக் குணம். பிஞ்சு விடப் பிறந்த கொடி. தானாக மூளைத்தாலும், பயிர் செஞ்சாலும் பலன் ஒண்ணு தான். ஆனா.......

'' ஏன் நிறுத்திப்பிட்டீங்க?....''

''காய்க்காத பூச்சரம் கண்ணுக்கும் மூக்குக்குமா மலர்றது.... ஆனால்.... பூசணி பாரு, வவுத்துக்கும் பயன்படறது...?''

''ஆமா! நீங்க எத்தனையோ இலக்கியம் பேசுவீங்க'' என்று நொடித்தாள் பூஷணி.

''இதப்பாரு, குணபூஷணி. பூசணி பூசணி தான். மல்லிகை மல்லிகைதான். ஒரே ஒரு நாள் வாழ்ந்துவிட்டுத் தான் வாழ்ந்ததுக்கும் மலர்ந்து மணம் பரப்பிச் இறங்க வைத்ததற்கும் அடையாளம் இல்லாத மலர்க்கொடியை இன்னிக்கு வெட்டிப் போட்டுட்டாங்க.... ஆனா.... பூசணி.... பூஷணியா.... அஞ்சாறு காயி. அதிலே வெறைகள்.... அந்த வெறைகள் மொளச்சி...''

''திருப்பி இத்தனை வயசாகியும்... இந்தப் பாட்டுத்தானா.....?''

''இந்தப் பாட்டு இல்லே.... புதுப் பாட்டு. பக்கத்து வீட்டு மல்லிகாவே இதைச் சொல்லிட்டுப் போயிருக்கா......''

''ஏது... ஏதாவது கனவு கினவு? இல்லே... மல்லிகா மோகினிப் பிசாசா வந்து பிடிச்சுக்கிட்டாளா?'' குணபூஷணி பயந்துவிட்டாள்.

''இல்லேடி.... என் பெட்டி அடியிலே ஒரு பழைய பர்ஸ்லே அவ எழுதின கடுதாசி இருக்குது. அதுலே எழுதியிருக்கா....''

''ஏதேது.... அது வேறே நாடகமா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே. போலீஸ் தொந்தரவுக்குப் பயந்து போயி மல்லிகா எழுதி வெச்ச கடுதாசை மறைச்சு நான் கொண்டாந்துட்டேன். இயற்கையா ஷாக்குன்னு அன்னிக்குச் சொல்லிப்புட்டோம். ஆனா.... அவ எழுதியிருக்கா பாரு'' என்று சொல்லி என் பெட்டியின் அடியில் கிடந்த அந்தப் பழைய ரகசியத்தைக் கிளப்பினேன். குணபூஷணி மல்லிகாவின் கடிதத்தைப் படித்தாள்.

''இக்கடிதம் காண்பவர் எவராயிருந்தாலும் சரி... நானாகிய மல்லிகா என் சுய மனத் திருப்தியுடன்தான் மின்சாரத்தில் கை வைத்து இறக்கத் துணிகிறேன். நான் காய்க்காத மலர்க் கொடிதான். ஏன்தான் எனக்கு மல்லிகா என்று பெயர் வைத்தார்களோ! கண் நிறைந்த கணவன் கைநிறையச் சம்பாதிக்கிறார். நகை, துணி,மணிகள் ஏராளம். அன்பு அளவுக்கு அதிகம்தான். ஆனால் நான் பிஞ்சு விடாத மலர். இதை நன்றாக அறிந்துவிட்டேன். நான் பிஞ்சுவிட முடியாத மல்லிகை. இந்த நிலையில் அன்பு கொண்டு நம்பிய கணவருக்கும் ஏமாற்றம் அளிக்க மனம் என்னை இந்த முடிவுக்கு அனுமதித்தது. இதற்கு யாரும் பொறுப்பல்ல. விதிதான்.''—மல்லிகா


SKYLARK







# காய் கறிக் கொலு!

“இப்போ கறிகாய்கள் யானை விலை, குதிரை விலை விற்கிறதைப் பார்த்தால் அவற்றைக் கடைக்காரனே கொலுவா வைக்கக் கட்டும்னு சொல்விட்டு வந்துடலாம்னு தோணறது !'' என்றார் நடுத்தரக் குடும்பஸ்தர்.

''கவலைப்படாதேயும். நவராத்திரி சமயத்திலே இந்தக் கறிகாய்களை ஹாங்காங்கிலிருந்து வந்துள்ள ஸ்ரீமதி ஜயா விசுவநாதன் அழகழகாகக் கோயிலாகவும், பூவாகவும், படகாகவும் ஆக்கித் தந்துடறாளாம்! பிரிஜ்லே வைச்சிருந்தா இந்த அழகுப் பொருள்கள் அழியாம மூணு மாசம் இருக்குமாம்! காய்கறிக் கடைக்காரன் நவராத்திரியை இந்த விசேஷக் கொலு வைச்சுக் கொண்டாடலாம் !''

''ஓய்! நீர் இந்தக் காய்கறிக் கொலு செய்யறதை எங்கே பார்த்தீர்? எங்கிட்டே சொல்லவேயில்லையே?''

''மயிலாப்பூர் சீனிவாச காந்தி நிலையத்திலே ஸ்ரீமதி ஜயா விசுவநாதன் இந்தக் 'காய்கறிக் கொலு'வை முதல்லே அரங்கேற்றுப்படி செய்தாள்! மயிலாப்பூர் மாமிகளெல்லாம் வந்து பார்த்து அப்படியே அசந்து போயிட்டா !'' என்று விவரித்தேன்.

'' விவரமாகச் சொல்லும் !'' என்றார் நண்பர்.

கல்லைக் குடைந்து கோயிலாக்கியுள்ளதைக் கேள்விப்பட்டுள்ளோம்; மண்ணைப் பிசைந்து வண்ணப் பொம்மைகள் ஆக்குவதைத் தெரிந்து வைத்திருக்கிறோம். ஆனால் கறிகாய்களைக் குடைந்தெடுத்து அழகழகான கோயிலாகவும், ரதமாகவும், பூவாகவும், படகாகவும், மேஜை அலங்காரப் பொருள்களாகவும் ஆக்கும் வித்தையை இப்பொழுதுதான் கேள்விப்படுகிறோம்.

ஸ்ரீமதி ஜயா விசுவநாதன் கல்கத்தா சர்வகலாசாலைப் பட்டதாரி; ஸ்ரீ விசுவநாதன் திருச்சி தேசியக் கல்லூரிப் பட்டதாரி. ஹாங்காங்கில் திரு விசுவநாதன் நாஷனல் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியிலே பணியாற்றி வருகிறார். ஹாங்காங் தமிழ்க் கலைக் கழகத்தின் தலைவர்.

ஸ்ரீமதி ஜயா விசுவநாதன் இந்தக் 'கறிகாய்கள் குடைந்து கலையாக்கும் வித்தை' பற்றித் தெரிந்து கொண்டது, பாங்காக்கில் தாய்லாந்து ராணிகளில் ஒருத்தியின் சித்திரலதா அரண்மனையில்.

ஸ்ரீமதி ஜயா விசுவநாதன் பாங்காக்கில் ஓர் ஆஸ்பத்திரியில் நர்ஸ்களுக்கு ஆங்கிலப் பாடம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அச்சமயம், செஞ்சிலுவை, சமூக நலவில் அக்கறை கொண்ட தாய்லாந்து ராணி ஸ்கிரீட்டைச் சந்திக்கும் வாய்ப்பு ஸ்ரீமதி ஜயாவுக்கு ஏற்பட்டது. இருவருக்கும் பரிச்சயம் ஏற்படவே தாய்லாந்து ராணியின் விருந்தினராக அவரது அரண்மனைக்குச் சென்றாள் ஸ்ரீமதி ஜயா. காய்கறியைக் குடைந்து கலையாக்கும் வித்தையைப் பற்றிய அறிமுகம் அவளுக்கு அங்கு ஏற்பட்டது. தாய்லாந்து ராணியின் அரண்மனைச் சேடிகள் இந்தக் கலையில் வல்லுநர்களாம். ஸ்ரீமதி ஜயா விசுவநாதனுக்கு இந்தக் கலையைக் கற்றுக் கொள்ளும் ஆசை பிறந்தது. கோலமிடும் கை மூன்று மாதங்களில் கத்தி பிடித்துக் கறிகாய் குடை





- மேலே: ஸ்ரீமதி ஜயா விசுவநாதனின் கை வண்ணம் காண்கிறோம்.
- கறிகாய்கள் படகாகவும், பூவாகவும் உருமாறி விட்டன.
- இடது: ஸ்ரீமதி ச்ரி தயாரித்துள்ள 'லக்ஸ்' சோப்புத் தெய்வங்கள்.

யும் கலையைப் பயின்றது. அதன் பலன்; வெங்காயம் ரோஜாவாயிற்று. வெள்ளரிக்காய் படகாயிற்று. கேரட் எஃபெல் கோபுரமாயிற்று.

"இந்தக் கலையின் பூர்விகம் பற்றிச் சொல்ல முடியுமா?" என்று ஸ்ரீமதி ஜயா விசுவநாதனைக் கேட்கிறோம்.

"இந்தக் கலை சீனாவில் தோன்றியது. சீனாவின் பணக்காரப் பிரபுக்களின் தொல்லைகளுக்குள்ளான ஏழைச் சீனர்கள் தென் கிழக்காசியாவுக்குக் குடியேறினர். ஏழைச் சீனர்கள் 'நார்சிஸஸ்' என்ற பூவில் இந்த அழகுக் கலையைக் கையாண்டனர். இந்த அலங்காரப் பூவைப் புது வருஷத்தில் புத்த பகவானுக்கு அர்ப்பணிப்பார்கள். இந்தப் பூ அரிதாகி விடவே பப்பாளிப் பழத்தில் இந்த அழகுக் கலையைச் செய்யத் தொடங்கினர்!"

"உங்கள் விசேஷத் திறமையைப் பிறருக்குப் பயன்படும்படி செய்து வருகிறீர்களா?"

"ஓ! ஹாங்காங்கில் 'Floral Art' பள்ளியில் இந்த அழகுக் கலை வகுப்புக்கள் நடத்தி வருகிறேன். ஒரு விசேஷம், இந்தக் கலை பிறந்த தாயகத்திலிருந்து வந்த சீனர்களுக்கு நான் கற்றுத் தருகிறேன். இந்தக் கலையைப் பற்றி நான் சொல்லித்தான் அவர்களுக்குத் தெரிந்தது என்பது அதிசயமில்லையா?"

ஸ்ரீமதி ஜயா விசுவநாதன் விளக்கம் கூறிக் கொண்டே ஒரு சிறு கத்தி, சில பித்தளைக் கருவிகள் கொண்டு காய்கறிகளில் அழகழகான விந்தைப் பொருள்களைச் சமைத்துக் கொண்டிருக்கிறாள்!

"இங்கே சென்னையில் மார்க்கெட்டுக்குப் போய் இந்தக் கறிகாய்களைத் தேர்ந்தெடுக்க ரொம்ப நேரம் செலவிட்டுக் கொண்டிருந்தேன். கறிகாய்க் கடைக்காரனுக்கு ஒரே எரிச்சல்! 'என்ன அம்மா! நீங்க இந்தக் கறிகாய்களைப் பத்திரப்படுத்திப் பூட்டி வைக்கப் போறீங்களா?' என்று இரைந்தான்! நான் அழகுப் பொருள்கள் சமைக்க எடுத்துப் போகிறேன் என்பது அவனுக்குத் தெரியாது!" என்று கூறிச் சிரிக்கிறாள் கலை வல்லுநர் ஸ்ரீமதி ஜயா.

அருகில் உள்ள 'ஹிந்து' புகைப்பட நிபுணர் சாரி, பேச்சோடு பேச்சாக, "ஸார்! என் மனைவி லக்ஸ் சோப்பிலே ராமர் பட்டாபிஷேகம், பிள்ளையார், மும்மூர்த்திகள் செய்து இதே சீனிவாச காந்தி நிலையத்திலே 'எக்ஸிபிஷன்' வைச்சிருந்தோம்!" என்று முணுமுணுக்கிறார்.

"இந்தாங்கோ! இன்றையப் பிரதான விருந்தினரைக் கௌரவிக்கிற இடத்திலே நம்மைப் பற்றி எதற்குத் தம்பட்டம் அடித்துக் கொள்ளுகிறீர்கள்!" என்று ஸ்ரீமதி சாரி ஒரு முறைப்பு செய்துவிட்டு, அடக்கமாக ஓர் இடத்தில் அமர்ந்து ஸ்ரீமதி ஜயாவின் செய்நேர்த்தியைப் பார்ப்பதில் ஈடுபடுகிறாள்.

ஹாங்காங்கிலிருந்து வந்துள்ள திரு விசுவநாதனிடம், "ஹாங்காங்கில் வாழ்க்கை எப்படி?" என்று கேட்டேன்.

"ஹாங்காங் வாழ்க்கைச் செலவு ரொம்ப அதிகம். வாழ்க்கைச் செலவில் உயர்ந்த நகரங்கள் நியூயார்க், டோக்கியோ. ஹாங்காங் மூன்றாவது இடத்தைப் பெறுகிறது!" என்கிறார் விசுவநாதன்.

"ஹாங்காங்கில் இந்தியர் குடும்பங்கள் எத்தனை? அவர்கள் எந்தெந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர்?"

"இந்தியர்கள் மூந்நூறு பேர். பெரும்பாலும் தென்னிந்தியர்கள். வைர வியாபாரிகள் அதிகம். உத்தியோகப் பணியில் ஈடுபட்டிருப்பவர் கொஞ்சம் பேர்!" என்று விளக்குகிறார் திரு விசுவநாதன். 'உலகம் சுற்றும் வாலிப'னுக்காக எம். ஜி. ஆர். குழு ஹாங்காங் சென்றிருந்தபோது அவர்களுக்குப் பேருதவியாக இருந்தவர்கள் விசுவநாதன் தம்பதியர்.

நவராத்திரி சமயத்தில் ஸ்ரீமதி ஜயா அறிமுகப்படுத்தியுள்ள இந்தப் புதிய கலையான 'காய்கறிக் கொலு'வுக்கு ஏகமாகக் கிராக்கி இருந்தால் அதிசயமில்லை. இந்தத் தடவை மயிலாப்பூர் மாமிகள் இந்தக் 'காய்கறிக் கொலு' பாஷனைக் கைக்கொண்டால் காய்கறிகளின் விலைவாசி மேலும் உயர்ந்து விடப் போகிறது. ஜாக்கிரதை!

பேட்டி: **பி.எஸ்.எம்.**





# [redacted] னலடிக்கும் வெண்மைக்கே...
# ரின்






ரின். சோப் அல்ல இது. புத்தம் புதுமையான ஒரு சலவைச் சாதனம்—வில்லை வடிவிலே ஒரு டிடர்ஜெண்ட். சிக்கன மிக்கது ரின்: சோப்பைவிட மேலும் அரை மடங்கு அதிகத் துணிகளை வெளுத்திடும். திறந்த சோப்புப் பெட்டியிலே ஈரமுலர வைத்துக் கொண்டால் சிறந்த பலன் அளிக்கும் ரின். குடும்பத்திலுள்ள ஆடவரின், பெண்டிரின், குழந்தையரின்...யாவரின் துணிகளிலும் மின்சுடரின் வெண்மை பளிச்சிடவே: ரின்!

**சலவையோ யானையளவு!**
**சோப்பைவிட அரை மடங்கு அதிகத் துணிகளை வெளுப்பது ரின்!**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

## எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட்

# வழக்கறிஞர்: விளையாட்டுக் கலைஞர்!



எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட், நகரில் கலை வளர்க்கும் சபைகள் மற்றும் பல பொது நிறுவனங்களுக்குப் பிரசிடெண்டாக இருந்தவர். இன்றும் சில ஸ்தாபனங்களுடன் அந்தவித இணைப்புக் கொண்டவர். அவர் என் மாமனாரும்கூட. பிரபலமான புள்ளி. அவர் ஓர் 'அட்வகேட்' என்று தெரிந்து கொண்டிருப்பவர்களைவிட அவரை ஒரு நல்ல கலாரசிகர் என்று தெரிந்து வைத்திருப்பவர்கள் அதிகம்.

அவர் தொழிலால் வழக்கறிஞரே தவிர குணத்தால், வம்பு வழக்கு என்று நினைத்தே அறியாதவர். எல்லாப் பிராயத்தவரிடத்திலும் வித்தியாசம் இல்லாமல் சரளமாக, சமமாகப் பழகுவார். இவரைப் பொறுத்த வரையில் கோபம் என்பது அபூர்வமான சரக்கு.

இவர் சட்டப் பரீட்சையில் தேறி வெளி வந்த நேரம், நாட்டில் ஒத்துழையாமை இயக்கம் பரவி வந்த காலம். இவர் உடனடியாகக் கோர்ட்டுப் படிகள் ஏறித் தொழில் செய்வதில் உற்சாகம் காட்டாமல், ஆந்திர கேசரி பிரகாசம்காரு நடத்திவந்த 'ஸ்வராஜ்யா' தினப் பத்திரிகையில் உதவியாளராகச் சேர்ந்து விட்டார். மாதம் எழுபத்தி ஐந்து ரூபாய் சம்பளமாம்! மாதச் சம்பளம் ஒழுங்காக வராத போதிலும் உத்தியோகம் பெருமையுள்ளதாயிற்றே!

'ஸ்வராஜ்யா' பத்திரிகை மூடப்பட்டவுடன் இவருக்குத் தாம் சட்டம் படித்தது நினைவுக்கு வந்தது. சி. நரசிம்மாச்சாரியார் என்பவரிடம் தொழில் கற்றுக் கொண்டு கோர்ட்டுக்குப் போக ஆரம்பித்துவிட்டார்.

ஆனால் 'ஸ்வராஜ்யா' பத்திரிகையில் இருந்த போது எழுத்தில் மேதைகளான, காசா சுப்பாராவ், என்.எஸ். வரதாச்சாரி, ஜி. வி.கிருபாநிதி, ஈஸ்வர் தத் போன்றவர்களுடன் பழகும் சந்தர்ப்பம் கிடைத்ததால், இவரும் ஓர் எழுத்தாளராகிவிட்டார். சட்ட சம்பந்தப்பட்ட விஷயங்கள், பொது விவகாரங்கள் பற்றி எழுதும் இவர் அந்த நாட்களில் தமிழில் சிறுகதைகளும் நிறைய எழுதியிருக்கிறார்.



'தமிழில் அர்ச்சனை' பற்றி இவர் ஆங்கிலத் தினசரி ஒன்றில் எழுதியிருக்க விஷயத்தைப் பாராட்டி அமரர் ராஜாஜி தம் 'ஸ்வராஜ்யா'வில் குறிப்பு எழுதி மேற்கோள் காட்டியதை இவர், தம் வாழ்க்கையிலேயே வெகு உயர்ந்த நற்சான்றாகநினைத்து அடிக்கடி பூரித்துப் போவார்!

காப்பி, டீ. இவைகளையெல்லாம் கிட்டவே அண்ட விட மாட்டார். தேவையானால் பால் மாத்திரம் சாப்பிடுவார். வெங்காயம் என்பது அறவே ஒதுக்கப்பட்ட விஷயம்! மற்ற 'அயிட்டங்'களில் விருப்பு வெறுப்பு என்று கிடையாது!

அந்த நாட்களில் இவர் பெரிய ஸ்போர்ட்ஸ்மானும்! கிரிக்கெட், வாலிபால் — போன்ற விளையாட்டுக்களில் ஆர்வம் அதிகம். வக்கீல்கள் சங்கம் ஆண்டுதோறும் நடத்தும் பல விளையாட்டுக்களில் கலந்து கொண்டு முப்பது நாற்பது வெற்றிக் கோப்பைகளை வாங்கிக் குவித்திருக்கிறார். ஏன், போன வருடம் கூட, தம்முடைய அறுபத்தி ஏழாவது வயதில், அதே வக்கீல்கள் சங்கம் நடத்திய நடக்கும் போட்டியில் (Walking Race) தம்மைவிட வயதில் குறைந்த பலருடன் போட்டியிட்டு, முதல்பரிசைத் தட்டிக் கொண்டு வந்துவிட்டார்!

மைசூர் பிராந்தியத்தில் உள்ள மண்டயத்தைச் சேர்ந்தது இவர் குடும்பம். நான்கு தலைமுறையாக இவர்களுக்கு ஒரே பெயர்தான். என் மாமனாரின் தகப்பனார், தாத்தா, இவர்களின் பெயரும் எம்.ஏ. சீனிவாசன்தான். என் கணவர் பெயரும் அதேதான்! இது ஒரு சம்பிரதாயம். ஆனால் எதிர்பாராத மற்றோர் ஒற்றுமை இந்தக் குடும்பத்தில் என்னவென்றால், என் பெயரும், என் கணவரின் ஒரே இளைய சகோதரரான நரசிம்மன் அவர்களின் மனைவி பெயரும் ஒன்றுதான்! அவள் பெயரும் யதுகிரி!

இவர் அந்த நாள் விளையாட்டு ஆர்வக்காரராக இருந்ததினாலோ என்னவோ, தம் குமாரர்கள் இரண்டு



**பிரசிடெண்ட் : திரு எம். ஏ. சீனிவாசன்,**
**எம். ஏ., பி. எல்.**

**பேட்டியளித்தவர் : மேற்படியாரின் மருமகள்**
**ஸ்ரீமதி யதுகிரி.**

பேரையுமே சாரணர் இயக்கத்தில் சேரச் செய்து நல்ல தேர்ச்சி பெறச் செய்திருக்கிறார். தந்தையுடன் சேர்ந்து வக்கீல் தொழில் புரியும் என் கணவர், இன்றைக்கும் கோர்ட்டிலிருந்து வந்ததும் கறுப்புக் கோட்டைக் கழற்றி மாட்டிவிட்டுக் காக்கி டிராயர் சட்டையைப் போட்டுக்கொண்டு ஸ்கௌட் முகாமுக்குக்கிளம்பிவிடுகிறார்!

திரைப்படம், நாடகம், நடனம் எல்லாவற்றிலும் இவருக்கு ஈடுபாடு உண்டு. திரைப்படப் பத்திரிகையாளர்கள் சங்கத் தலைவராகக்கூடச் சில வருடங்கள் பணியாற்றியிருக்கிறார். நாடகங்கள் பார்த்துவிட்டு வந்து அவற்றின் நிறைவு குறைவுகளை அலசுவார். நல்ல நாடகங்களைப் பார்க்க எங்களையும் ஊக்குவிப்பார்!

இத்தகைய கலகலப்பான மனிதர்கூடப் பொறுமையின் காரணமாக ஒரு மோசடிக்கு ஆளானார். ஒரு முக்கியமான வழக்கில் அன்று இவர் ஆஜராக வேண்டியிருந்தது. விசாரணையில் முக்கியமான கட்டம். கோர்ட்டில் இவர் இருந்தபோது, இவரை வக்கீல்கள் சங்கக் கட்டடத்தில் உள்ள டெலிபோனில் யாரோ கூப்பிட்டிருக்கிறார்கள். இவர் அங்கே இல்லை என்றதும் டெலிபோனில் கூப்பிட்டவர், பெங்களூரிலிருக்கும் என் மைத்துனர் விபத்துக்குள்ளாகி விட்டதாகவும் உடனே இவர் புறப்பட்டு வரவேண்டும் என்றும் செய்தி சொல்லியிருக்கிறார். இந்தத் தகவலைக் கேட்டதும் இவர் பதறி, வீட்டுக்கு வந்து பெங்களூருக்கு 'போன்' செய்தார். அங்கே, என் ஓரகத்திக்கு ஒரே ஷாக். அப்படி ஒன்றும் இல்லை என்றாலும், அவளும் தன் கணவர் இஞ்சினியராகப் பணியாற்றும் தொழிற்சாலைக்கு டெலிபோன் செய்து இந்த நிகழ்ச்சியே ஒரு மோசடி என்று உறுதிப்படுத்தினாள். அப்புறம் இவரும் இங்கே அலசி ஆராய்ந்து, இந்தப் பொய்ச் செய்தியை இவர் கோர்ட்டில் ஆஜராகாமல் தடுக்க, யார் கையாண்டார்கள் என்பதையும் தெரிந்து கொண்டார். ஆனால் அதைப் பெரிது படுத்தாமல் அலட்சியம் செய்து மன்னித்து மறந்து விட்டார். இந்தச் சூழ்ச்சியினால் அந்த வழக்கும் பாதிக்கப்படவில்லை.

எங்கள் வீட்டுப் பிரசிடெண்ட் வயதில் முதிர்ந்தவர். உணர்ச்சியில் இளைஞர். வாழ்க்கையில் ரசிகர்!

— **கோமதி ஸ்வாமிநாதன்**

---

## சாம வேதம்

சாம வேதத்தில் அபாரமான பாண்டித்யம் பெற்றவரான மாயூரம் பிரம்மஸ்ரீ ராமநாத தீக்ஷிதர் அவர்கள், அவ்வேதம் குறித்த விஷயங்களை ஒருங்கே திரட்டி எழுதியுள்ள ''சாம வேத சர்வஸ்வம்'' என்ற அரிய வடமொழி நூலைச் சமீபத்தில் மாநில ஆளுநர் திரு கே. கே. ஷா வெளியிட்டார்.

## ஸோலோ பானம்

1916ம் ஆண்டு காளி ஏரேடட் வொர்க்ஸ் மிகவும் எளிய முறையில் தொடங்கப்பட்டது. இன்று, அந்த நிறுவனத்தார் பல்லாண்டு வளர்ச்சியில், ஏழு முக்கியமான ஊர்களில் தொழிற்சாலைகளை உருவாக்கிச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள். அவர்கள் இப்பொழுது புதியதொரு பானத்தைத் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்கள். அதுதான் ஸோலோ. எலுமிச்சை ரசத்தின் ருசியைக் கொண்ட பானம் இது.

அண்மையில் சினிமா நடிகை ஜெயந்தி மேற்படி புதிய பானம் ஸோலோவை வெளியிட்டார். அகில இந்திய ஹோட்டல் சங்கத் தலைவர் திரு பி. ஆனந்த ராவ் முதல் ஸோலோவைப் பெற்றுக் கொண்டார்.



"என் மனைவி எத்தனையோ நீலங்களை உபயோகித்துப் பார்த்திருக்கிறாள்...ஆனால் ராபின் ப்ளூ எங்கள் குடும்பத் துணி-உடைகளை, மிகப் பளிச்சிடும் தூய வெண்மை ஆக்குவதை நன்கு காண்கின்றாள்"

திரு கணேஷ், ஊக்கமுள்ள
வர்த்தகச் செயலதிகாரி



இதனை லட்சக்கணக்கான
குடும்பத் தலைவர்களும்
ஒப்புக் கொள்ளுகின்றனர்




வெள்ளைத் துணி-உடைகளை, ஸோப்பு அல்லது டிடர்ஜென்ட் கொண்டு வெளுக்கச் செய்வது மட்டும் போதாது. மிகப் பளிச்சிடும் தூயவெண்மை ஆக்குவதற்கு அவற்றை ராபின் ப்ளூவில் முழுக்கச் செய்தெடுக்க வேண்டும். ஒரு வாளி தண்ணீரில் ஒரு சிட்டிகை ராபின் ப்ளூ அற்புதமாக வேலை செய்யும்.

# ராபின் ப்ளூ

வெள்ளைத்துணி-உடைகளை மிகப்
பளிச்சிடும் தூயவெண்மை ஆக்குகின்றது

ARBC-37 TAM

# இன்ஸ்பெக்டர் விக்ரம்

கதை:

படம்: பிரதாப் முல்லிக்

௧௦
































# பஸ்ஸுக்குக் காத்திருந்தேன்; டாக்ஸி கிடைத்தது!

வாரிஜ குமாரி

சிவமதியும் சுகந்தாவும் 1-75 க்யூவில் நின்று கொண்டிருந்தார்கள். தற்செயலாக 2.60 கவுண்டரின் பக்கம் சிவமதியின் பார்வை சென்றது. சட்டென்று சுகந்தாவின் முதுகில் விரலால் மெள்ளக் குத்தினாள். என்னவென்று கேட்கும் பாவனையில் திரும்பிப் பார்த்தாள் சுகந்தா. 'அங்கே பார்' என்பதைப் போல் விழிகளை உருட்டிப் பார்த்தாள். அங்கே சிம்மேந்திரன் டிக்கெட் வாங்கிக் கொண்டிருந்தான். அவனுக்கு முன்னாலோ பின்னாலோ யாருமில்லை. சுகந்தா ஒரு கணம் யோசித்தாள். சட்டென்று 'க்யூ'வை விட்டு வெளியே வந்தாள். சிம்மேந்திரன் டிக்கெட்டை வாங்கிக் கொண்டு உள்ளே போய் விட்டான். சிவமதியின் கையைப் பிடித்து அழைத்துச் சென்று இரண்டு 2-60 டிக்கெட்டுக்களை வாங்கினாள்.

"1-75 டிக்கட்டே சுலபமாக் கிடைக்குமே?" என்றாள் சிவமதி.

"டிக்கட் கிடைக்கும். இந்த மாதிரி ஒரு சந்தர்ப்பம் கிடைக்குமா ?"

"நம்மைப் பற்றி அவர் தவறாக எண்ணி விட்டால் ?"

"இதில் தவறாக நினைக்க என்ன இருக்கு? தற்செயலாக அவருக்கு அடுத்த டிக்கட்டுகள் நமக்குக் கிடைத்திருப்பதாக நினைத்துக் கொள்ளட்டுமே !....."

கையில் ஒரு டார்ச் விளக்குடன் நின்று கொண்டிருந்த தியேட்டர்ச் சிப்பந்தி சுகந்தாவையும் சிவமதியையும் அவர்களுடைய இடத்தில் – சிம்மேந்திரனுக்குப் பக்கத்து இடங்களில் உட்கார வைத்தான். சுகந்தா தான் சிம்மேந்திரனுக்குப் பக்கத்தில் அமர்ந்தாள். அவர்கள் வந்ததையோ, உட்கார்ந்ததையோ சிம்மேந்திரன் கவனிக்கவில்லை. கையில் ஒரு புத்தகத்தை வைத்துக் கொண்டு அதில் மூழ்கியிருந்தான்.

"எத்தனை மணிக்கு ஷோ முடிவடையும்?" என்று கேட்டாள் சிவமதி.

"இன்னும் ஆரம்பிக்கவே இல்லையே; அதுக்குள்ளே முடிவைப் பற்றி ஏன் கேட்கிறே? எல்லாம் சுபமாகத்தான் முடியும்!" என்ற சுகந்தா ஓரக் கண்ணால் சிம்மேந்திரனைப் பார்த்தாள்.

"முடிவு எப்படி இருக்கும்னு கேட்டேன்? எப்ப முடியும்னுதான் கேட்டேன்...."

"அதுதான் சொன்னேனே, 'சுபம்'னு போட்டதும் முடிவடையும். உனக்குச் சந்தேகமிருந்தா ஸாரை வேணும்னா கேளு!..." என்று கூறியபடி சிம்மேந்திரன் பக்கம் திரும்பினாள். அப்பொழுதுதான் அவர்களைக் கவனித்த சிம்மேந்திரன் விழிகளில் ஆச்சரியம் தோன்ற, "நீங்களா?" என்றான் சுகந்தாவைப் பார்த்து.

"நாங்கதான்! ஏன்? நாங்கள் 2.60க்கு வரக் கூடாதா?.... 1-75 இல்லேன்னுட்டான்....." என்று கூறிவிட்டு உடனே நாவைக் கடித்துக் கொண்டாள் சுகந்தா. 1.75ல் பாதிக்கு மேல் காலியாகக் கிடந்ததே!

"அதில்லே.... நீங்களான்னு கேட்டேன்" என்று சிம்மேந்திரன் ஏதோ மழுப்பினான்.

"நீங்களான்னு?.... எங்களைத் தெரியுமா உங்களுக்கு.....?" உதட்டில் புன்னகை தவழக் கேட்டாள் சுகந்தா.

"தினமும் பஸ் ஸ்டாப்பில் பார்க்கிறேன்."

"அடடா ! தெரியாது போச்சே.... இவ்வளவு நாட்களும் ஒருத்தர் தினமும் என்னையே பார்த்துக் கொண்டிருக்கிறார் என்று தெரிந்திருந்தால் வேறு ஸ்டாப்புக்குப் போயிருப்பேனே.... நீங்க என்னையே மெய்ம் மறந்து பார்த்துக் கொண்டிருந்ததை யாரெல்லாம் பார்த்தார்களோ, என்னவெல்லாம் பேசிக் கொண்டார்களோ!...." என்றவள் சிவமதியின் பக்கம் திரும்பி, "கேட்டியா, சிவமதி? தினமும் இவர் என்னையே கவனிச்சிண்டிருந்தாராம்...." என்றாள்.

'ஆனாலும் உனக்குத் திமிர் அதிகம்' என்பதைப் போல் அவளைப் பார்த்தாள் சிவமதி.

சிம்மேந்திரன் சிரித்தான்.

"உங்களுக்கு ஒரு விஷயம் ஞாபகம் இருக்கா?" என்று சுகந்தா கேட்டாள்.

"எந்த விஷயம் ?"

"இன்னும் நான்கு மாதங்களில் நீங்கள் மொட்டை அடித்துக் கொள்ள வேண்டிய விஷயம் ?"

"அப்படி ஒண்ணும் பிரார்த்தனை இல்லையே !"

"பிரார்த்தனையாயிருந்தாலும் பரவாயில்லையே.....! சபதம்னு செய்திருக்கிறீர்கள் !" என்றாள் சுகந்தா. அந்தக் கணமே அவனுக்குத் தலையில் ஒரு கத்தி ஓடுவதைப் போல் ஒரு பிரமை உண்டாயிற்று. 'இந்த விஷயம் இவ

னுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று நினைக்கையில் ஒரு குற்ற உணர்வுடன் அவளைப் பார்த்தான். அவள் விழிகளில் உருவான ஒரு புன்னகை உதட்டில் விரிந்து மலர்ந்தது. நல்ல வேளையாக மீண்டும் படம் ஆரம்பமாகவே, அப்போதைக்குத் தப்பித்துக் கொண்டான்.

திரைப்படம் ஓடிக் கொண்டிருந்ததைப் போல் சிம்மேந்திரனுடைய நினைவுத் திரையிலும் பழைய சம்பவம் ஒன்று நிழலாடிக் கொண்டிருந்தது.

எட்டு மாதங்களுக்கு முன்பு நடந்த விஷயம் அது. தினமும் அலுவலகம் விட்டதும் பஸ் ஸ்டாப்பில் வந்து நின்று கொண்டு வேடிக்கை பார்த்தவாறு கால் மணி அல்லது அரை மணி நேரம் பொழுதைப் போக்குவான் சிம்மேந்திரன். சில சமயம் மூன்று நான்கு பஸ்கள் போய்விடும். அவனைப் போலவே சுகந்தாவும் நின்று கொண்டிருப்பாள். கூட்டத்தில் முண்டியடித்து ஏற முடியாமல் ஓரளவு நெரிசல் குறைந்ததும் ஏறலாம் என்று காத்திருப்பாள் அவள். சுகந்தா, நல்ல அழகி. சிம்மேந்திரனுடன் வேலை பார்க்கும் சில 'ஹீரோ'க்களுக்கு அவளிடம் ஒரு மயக்கம் உண்டு. அவள் எங்கிருந்து வருகிறாள், எங்கு வேலை செய்கிறாள் என்பதொன்றும் சிம்மேந்திரனுக்குத் தெரியாது. சொல்லப் போனால் அவள் முகத்தைக்கூட அவன் சரியாகப் பார்த்தது கிடையாது. ஆனால் அவனுடைய நண்பர்கள் சிம்மேந்திரன் அவளுக்காகத்தான் பஸ் ஸ்டாப்பில் தவம் கிடக்கிறான் என்று கிண்டல் செய்வார்கள்.

ஒரு நாள் அவர்களுடைய கிண்டலும் பரிகாசமும் அளவுக்கு மீறி விட்டன.

"நான் எவளுக்காகவும் இங்கு நிற்கவில்லை. பஸ்ஸுக்காகத்தான் நிற்கிறேன்!'' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். அவர்கள் நம்ப மறுத்தனர்.

"கிடையாது. நீ அவளுக்காகத்தான் தவம் செய்கிறாய்!'' என்று ஒருமுகமாகச் சாதித்தனர்.

"ஆமாம்! அப்படித்தான் இருக்கட்டும். அதைப் பற்றி உங்களுக்கு என்ன?'' - பொறுமையை இழந்து விட்டான் சிம்மேந்திரன்.

"வந்தியா வழிக்கு!... ஆனால் அவள் உனக்குக் கிடைக்க மாட்டாள்டா!...''

"ஏனாம்?''

"உன்னை எந்தப் பெண்ணடா விரும்புவாள்?''

"ஏண்டா, எனக்கு என்ன குறைச்சல்? உங்களுக்கு இருக்கிற 'பர்ஸனாலிடி' எனக்கு இல்லையா? உத்தியோகம் இல்லையா? படிப்பு இல்லையா? உங்களைப் போல் ரவிக்கைத் துணியில் ஸ்லாக் தைத்துப் போட்டுக் கொள்ளாதது ஒரு குறையா?'' என்று சிறிது படபடப்பாகக் கேட்டான் சிம்மேந்திரன்.

"ரஸிகத் தன்மை வேணும், பிரதர்! அது உன்னிடம் கிடையாது. ரஸிக்கத் தெரியாதவனை எந்தப் பெண்தான் விரும்புவாள்?''

"தெருவில் போகிற பெண்களையெல்லாம் இங்கிதமில்லாமல் பார்ப்பதுதான் ரஸிகத் தன்மையா? உங்களுக்கெல்லாம் விவேகம் கிடையாது. ஒரு பெண் தனியாக நின்றால் அவளைப் பார்த்துப் பல்லை இளிப்பது, அசிங்க



மான சினிமாப் பாட்டு எதையாவது பாடுவது, பஸ்ஸில் ஏறும்போது வேண்டுமென்றே இடித்துக் கொண்டு ஏறுவது, பஸ்ஸுக்குள் ஏறினபின்பும் முன் பக்கம் செல்லாமல் பெண்கள் உட்கார்ந்திருக்கும் பக்கமே நின்று கொண்டு ஏதாவது கோணங்கிகள் செய்வது.. இவற்றையெல்லாம் பெரிய வீரச் செயலாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் பாதிக்கப்பட்ட பெண்கள் உங்களைப் பற்றி என்ன நினைப்பார்கள் தெரியுமா?'' கொஞ்சம் சூடாகவே பேசினான் சிம்மேந்திரன்.

"என்ன நினைப்பார்கள் பிரதர்?''

"சுத்த அசத்துக்கள், வெறும் கழிசடைகள் என்று நினைப்பார்கள்!''

"உன்னைப் பற்றி என்ன நினைப்பார்கள்?''

"பெண்கள் என்னை மட்டமாக எடைபோடும் அளவுக்கு நான் நடந்து கொள்ள மாட்டேன்......''

"இதெல்லாம் எதுக்குடா, அநாவசியப் பேச்சு? நீ அந்த மைனாவுக்காகத்தான் பழி கிடக்கிறாய் என்கிறேன் நான்......'' என்று

கூறியவாறு சற்றுத் தள்ளி நின்று கொண்டிருந்த சுகந்தாவைக் காட்டினான் ஒருவன்.

"அப்படியே இருக்கட்டும். அதனால் உங்களுக்கு என்ன நஷ்டம் ?"

"நஷ்டம்தான். நீ அவளை விரும்புவதாயிருந்தால் நாங்கள் ஒதுங்கிக் கொள்கிறோம். எப்படியோ நம்மில் யாராவது ஒருவனுக்கு அவள் கிடைக்க வேண்டும்......"

" அவள் சம்மதிக்க வேண்டாமா?...." என்றான் சிம்மேந்திரன்.

"சம்மதிக்க வைக்கணும்!"

சிம்மேந்திரன் ஒரு நிமிஷம் தயங்கினான். ஏதாவது பதில் சொல்லாவிட்டால் விடமாட்டார்கள் போலிருந்தது. "ஆல்ரைட் ! நான் அவளை விரும்புகிறேன். அவளைச் சம்மதிக்கச் செய்து அடைகிறேன்!...." என்றான்.

"தேவையான காலம்?"

"அப்படீன்னா?" ஒன்றும் புரியாமல் விழித்தான் சிம்மேந்திரன்.

"ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் நீ உன் சபதத்தை நிறைவேற்ற வேண்டும்!"

சிம்மேந்திரன் ஒரு நிமிஷம் யோசித்தான். பிறகு, "சரி; ஒரு வருஷம் !" என்றான்.

"அதற்குள் நீ அவளை மணந்து கொள்ளாவிட்டால் ?"

" நீங்கள் யாராவது முயற்சி செய்யுங்கள் !"

" அதுதான் இருக்கவே இருக்கே!.... நீ தோற்றுவிட்டால் அதற்கு அபராதமுண்டு!"

" என்ன அபராதம் ?"

" நீ ஒரு வருடத்துக்குள் அவளை மணக்காவிட்டால் தலையை மொட்டை அடித்துக் கொள்ள வேண்டும்!...."

" ஆகட்டும் !" என்ற சிம்மேந்திரனின் கை படிப் படியாக வாரிவிடப்பட்டிருந்த சுருண்ட கேசத்தைத் தடவிக் கொடுத்தது.

" நண்பர்களே ! இனி சிம்மேந்திரனைத் தவிர நம்மில் யாரும் அந்தப் பக்கம் போகக் கூடாது ! நண்பனின் மனைவியாகப் போகிறவள் நமக்கெல்லாம் சகோதரிபோல!" என்றது ஒரு குரல்.

இந்தச் சம்பவம் நடந்து எட்டு மாதங்கள் ஓடி விட்டன. அன்றைக்குப் பிறகு சுகந்தாவைப் பற்றியோ, தன் சபதத்தைப் பற்றியோ அவன் நினைத்தது கிடையாது. உண்மையில் அவள் பெயர்கூட அவனுக்குத் தெரியாது. தெரிந்துகொள்ள முயன்றதுமில்லை. கூச்சம். இப்பொழுது அந்தப் பெண்ணே சபதத்தைப் பற்றி நினைவுபடுத்துகிறாள் !

சபதம் செய்த விஷயம் இவளுக்கு எப்படித் தெரிந்தது ?

சிம்மேந்திரன் குழம்பிக் கொண்டிருந்தான். மீண்டும் விளக்குகள் ஒளிவீசுவதற்குள் மெள்ள எழுந்து போய்விடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தான். அதை அவன் செயல்படுத்துவதற்குள் இடைவேளை பளிச்சிட்டது.

" ஏதாவது வாங்குடி !" என்றாள் சுகந்தா. குளிர் பானங்கள் விற்கும் பையனை அழைத்தாள் சிவமதி. ஜாடையாக மூன்று விரல்களைக் காட்டினாள் சுகந்தா. ஒரு கிளாசை எடுத்துச் சிம்மேந்திரனிடம் கொடுத்தாள். "எனக்கு எதற்கு?" என்று மறுத்துப் பார்த்தான். சுகந்தா விடவில்லை. வற்புறுத்தி வாங்கிக் கொள்ளச் செய்தாள்.

"உங்கள் சபதம் வெற்றியடைவதற்காக மூன்று பேரும் பருகுவோம் !" என்றாள் சிவமதி. சிம்மேந்திரனுக்கு என்னவோபோல் ஆகிவிட்டது. சுகந்தா வெட்கப்பட்டவள் போல் தன் முகத்தைத் தாழ்த்திக் கொண்டாள். ஒரு நிமிஷம் கழித்து, "அக்கௌண்ட்டெஸ்ட் பரீட்சை எழுதினீர்களே, ரிஸல்ட் தெரிஞ்சுதா?" என்று கேட்டாள். வியப்பு மேலிட அவளைப் பார்த்தான் சிம்மேந்திரன்.

"எனக்கு எப்படித் தெரியும் என்று நினைக்கிறீர்களா ? என்னைப் பற்றி எதையும் தெரிந்துகொள்ளாமல் நீங்கள் சபதம் செய்துவிட்டீர்கள். ஆனால், என்னால் உங்களைப் பற்றி விசாரிக்காமல் இருக்க முடியவில்லை. எட்டு மாதங்களாக உங்களைத்தான் 'ஸ்டடி' செய்து கொண்டிருக்கிறேன்....." என்றாள் நாணம் கலந்த புன்னகையுடன்.

" நான் சபதம் செய்த விஷயம் எப்படித் தெரிந்தது?" என்றான் சிம்மேந்திரன்.

" உங்களுக்கும் உங்கள் நண்பர்களுக்கும் நடந்த வாக்குவாதத்தைப் பஸ்ஸுக்காக உங்களுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த இவள் கேட்டுக் கொண்டிருக்கிறாள். அப்பொழுது இவளுக்கும் எனக்கும் பரிச்சயமே கிடையாது. உங்களுடைய சபதத்தைப் பற்றி என்னிடம் சொல்வதற்காக என்னுடன் பழகினாள்.... இப்பொழுது நாங்கள் நெருங்கிய தோழிகள்!.... இவள் பெயர் சிவமதி!" என்று சுருக்கமாகச் சொல்லி முடித்தாள் சுகந்தா. ஒரு நிமிஷம் மௌனமாயிருந்த சிம்மேந்திரன், "எட்டு மாதங்களாக என்னை 'ஸ்டடி' பண்ணினதாகச் சொன்னீர்களே?...." என்றான்.

"ஆமாம்; ஒரு வரன் வருகிறதென்றால் பிள்ளையைப் பற்றி, பிள்ளை வீட்டாரைப் பற்றியெல்லாம் விசாரிப்பதில்லையா?...... எங்கம்மாவுக்குப் பரம திருப்தி !"

" அம்மாவுக்குத் திருப்தியா ?"

"அப்பாவுக்கும் திருப்திதான்!"

"அப்பா அம்மாவுக்குத்தான் திருப்தியா?"

"அவர்கள் திருப்திதான் என் திருப்தி !" என்ற சுகந்தாவின் விழிகளில்ச்ருங்காரம் வழிந்தது. 'என் இதயபூர்வமாக உங்களைக் காதலிக்கிறேன்' என்று அவள் பார்வை பேசிற்று.

'நீ ரொம்ப அழகா யிருக்கிறாய்!' என்று சொல்ல வேண்டும் போலிருந்தது சிம்மேந்திரனுக்கு. சொல்லவில்லை. அந்த அழகை வெளிச்சத்திலும் இருட்டிலும் படம் முடியும் வரையில் பார்த்துக் கொண்டேயிருந்தான்.

அடுத்த மாதம் அவர்கள் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. சவால் விட்ட நண்பர்களுக்கு முன்னால் ஒரு வெற்றிவீரனாகத் திகழ்ந்தான் சிம்மேந்திரன்.

" நீ எந்தவிதமான முயற்சியும் செய்ததாகத் தெரியல்லியே.... எப்படியடா — வெற்றி பெற்றாய்?" என்று சிம்மேந்திரனிடம் அதிகமாகப் பழகும் நண்பன் ஒருவன் கேட்டான். சிம்மேந்திரன் உதட்டில் ஒரு புன்னகை நெளிந்தது. "பஸ்ஸுக்காகக் காத்திருக்கும் போது சில சமயம் டாக்ஸி வந்து நிற்கும்; ஏறிக்கிட்டுப் போயிடுவோம். அதுமாதிரி காதல் படகுக்காகக் காத்திருந்து கல்யாணக் கப்பலில் ஏறிட்டேன் நான்" என்றான்.



**திரு ஏ. கே. அய்யங்கார்**

தோற்றம் : 1903 மறைவு : 2-6-1973

கல்கத்தாவுக்கடுத்த லிலுவா-66, ஜி.டி. சாலையில் வசித்து வந்த **திரு ஏ.கே. அய்யங்கார்** 1973 ஜூன் 2ந் தேதி காலமானார். அவர்கள் கேஸோராம் பருத்தி ஆலையில் முப்பது ஆண்டுகளுக்கு மேல் நெசவும் பகுதி நிபுணராகவும் மேற்பார்வையாளராகவும் பணியாற்றி வந்தார். அவர் மிகப் பெரிய நன்கொடையாளர்; சமூகத்தின் எல்லாத் துறையினருக்கும் உற்ற நண்பராகத் திகழ்ந்தார்.



**திரு வி. கிருஷ்ணமூர்த்தி அய்யர்**

தோற்றம் : 16-4-1905 மறைவு : 3-9-1973

பிரமாதீச வருஷம் ஆவணி மாதம் 18ந் தேதி (3-9-1973) திங்கட்கிழமை இரவு 7-45 மணிக்கு ஓய்வுபெற்ற வருமான வரி இலாகா சூபர்வைசர் **திரு வி. கிருஷ்ணமூர்த்தி அய்யர்** சென்னையில் அவரது இல்லத்தில் சிவலோகப்பிராப்தி அடைந்தார். அன்னாருடைய பிள்ளைகள் சென்னை வருமான வரி துணை கமிஷனர் திரு வி. கே. ஜெயராமன், வி. கே. நரசிம்மன், கே. பலராமன், ஐந்து பெண்கள், மருமகன்மார்கள், மருமகள்கள், பேத்திகள், பேரன்கள் யாவரும் மீளாத்துயரத்தில் ஆழ்ந்துள்ளார்கள்.

# ராஜாஜியின் ஜெயில் டைரி

## 1922 பிப்ரவரி, 27உ

திங்கட்கிழமை. என்னைச் சிறையில் முதல் பகுதிக்கு மாற்றுமாறு சிறைத் தலைமை அதிகாரியிடம் கேட்க எண்ணினேன். இந்த அறையில் காற்றோட்டம் குறைவாயிருக்கிறது. அதிலும் இரவு முன் நேரத்தில் அதிகப் புழுக்கமாகவும் கொசுக்கள் நிறைந்ததாகவும் இருக்கிறது. பெரிய வார்டுகளில் ஜன்னல்கள் பெரியனவாக இருக்கின்றன. அத்துடன் படுத்து உறங்குவதற்காகக் கட்டப்பட்டுள்ள குறடுகளுக்கு அளவாக வைக்கப் பட்டிருக்கின்றன. அதனால் படுத்து உறங்கும்பொழுது காற்று வசதி உண்டாகிறது. அத்துடன் அந்தப் பெரிய வார்டில் இருந்தால் விடுதலை பெறுவதற்கு முன் இரண்டு வார காலமாவது நண்பர்களுடன் தங்கியிருக்கும் சௌகரியம் கிடைக்கும்.

சிறைத் தலைமை அதிகாரிக்கு உடம்பு சுகமில்லை என்று அறிகிறேன். அதனால் தான் அவர் இன்று வழக்கம் போல் சிறையைச் சுற்றிப் பார்வையிட வரவில்லை.

மோரும் உப்பும் சேர்த்தாலும் நாலு அவுன்ஸ் சவ்வரிசி எனக்கு அதிகமே. ஆகையால் அதில் மூன்றில் ஒரு பகுதியைத் தோட்டிக்குக் கொடுத்து விடுகிறேன்.

காங்கிரஸ் காரியக் கமிட்டி நீண்ட நேரம் யோசனைகள் செய்து வருவதால் அதன் முடிவுகளை அறிவதற்காக அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இன்று மாலை அகாலத்தில் கூடப் போவதாகத் தெரிகிறது.

## 1922 பிப்ரவரி, 28உ

செவ்வாய்க்கிழமை: நானும் சாஸ்திரியாரும் கௌஸ³ம் முதற் பகுதிக்குப் போக வேண்டும் என்று வார்டர் இன்று அதிகாலையில் வந்து கூறினர். சிறைத் தலைமை அதிகாரி சுற்றிப் பார்க்க வருமுன்னதாகவே அங்கு போய்விட வேண்டும் என்று அவசரப்படுத்தினர். அப்படியே நாங்களும் அங்கே போனோம்.

இதற்கு முன் இருந்த இடத்திலுள்ள கட்டுப்பாடுகளை விட இந்த இடத்தில் அதிகமாகும். இதுவரை நாங்கள் தனித் தனியான அறையில் இருந்து வந்தபடியால் இப்போது இங்கே சேர்ந்து இருப்பது ஏதோ நெருக்கமாக இருப்பது போல் தோன்றுகிறது. படுப்பதற்காகக் கட்டப்பட்டிருக்கும் திண்ணைகள் வெகு நெருக்கமாக இருக்கின்றன. ஒரு திண்ணைக்கும் இன்னொரு திண்ணைக்கும் ஓர் அடி இடைவெளிதான் உண்டு. ஒவ்வொரு கைதிக்கும் ஒரு திண்ணை. ஓர் அறைக்குப் பதினாறு கைதிகள். என்னுடைய தனிச் சிறைவாசம் முடிந்தது. இனி இரண்டொரு வாரங்கள் இங்கே தங்கிய பின் விடுதலை பெறுவேன்.



அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியார் பொதுஜனச் சட்ட மறுப்பை மட்டும் நிறுத்திவைத்திருக்கிறார்கள். மற்றப்படி நிலைமை பர்தோலி சத்தியாக்கிரஹத்துக்கு முந்தி இருந்ததேதான். இந்த விதமாகக் காரியக் கமிட்டியார் பர்தோலி முடிவைத் திருத்திவிட்டதைக் கேட்டு நான் மகிழ்கிறேன்.

ஆகவே, முடிவான விஷயம் யாதெனில், சர்க்காரும், காங்கிரஸ³ம் பரஸ்பரம் விட்டுக்கொடுக்காத நிலையிலேயே இருக்கிறார்கள் என்பதே. அடுத்த மூன்று மாத காலம் போராட்டம் வெகு கடுமையா யிருக்கும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இந்த தீபாவளிக்கு சாரதாஸின்
பெருமை மிக்க படைப்புகள்...

அழகு சாம்ராஜ்யத்தின் இளவரசிகளுக்கு

# "அனுராக்"

மயிலைப் பழிக்கும்
மங்கையருக்கு

# "டிம்பிள் குவீன்"

செல்லும் இடமெல்லாம்
பிரகாசத்தை அளிக்க

# சூர்ய வள்ளி

# சாரதாஸ்

32, N.S.B. ரோடு
திருச்சி-2
போன்: 7077

பட்டுப்புடவைகளுக்கு நம்பிக்கையான பெயர்

தன் பில்டிங் 175 1, மவுண்ட் ரோடு, சென்னை-2. போன்: 87177



**தீபாவளி முடிய ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு**

# ஞானக்குயில்

ஜெகசிற்பியன்

## 26. எல்லாம் மர்ம மயம்!

'வேதமூர்த்தியின் மகள் மனோகரிக்கு அந்தக் கடிதத்தில் உள்ள விவரம் தெரிந்திருக்குமா? நான் இவ்வீட்டுக்கு வந்த அன்றிரவு அவள் என்னிடம், தன் தாய் ஏதோ ஒரு கடிதத்தைப் பார்த்துவிட்டு இரத்தக் கொதிப்பால் பாதிக்கப்பட்டாள் என்று மட்டுமே சொன்னதிலிருந்து, அந்தக் கடிதம் எங்கிருந்து யாரால் எழுதப்பட்டதென்னும் தகவல் அவளுக்குத் தெரியாதென்றே தோன்றுகிறது. தந்தையும் தாயும் சேர்ந்துகொண்டு அவளிடம் அந்தக் கடிதத்தைக் காட்டாமல் மறைத்து விட்டிருக்கலாம். அப்புறம் அவர்கள் வீட்டு வேலைக்காகக் கன்னிகாமாடத்திலிருந்து ஒரு பெண்ணை அழைத்து வந்திருப்பதாய்ச் சொல்லியிருக்கலாம். அவளும் அதை நிஜம் என்று நம்பி, என்னிடம் இன்று மதியம் அதே விவரத்தைக் கூறியிருக்கலாம்.'

நரகுவின் மனம் திடீரென்று வெகுண்டு சிவந்தது. இத்தனை நாட்களும் வேதமூர்த்தியின் மேல் அவன் வைத்திருந்த அன்பு, மதிப்பு, மரியாதையெல்லாம் சடசடவெனச் சரியத் தொடங்கின. அத்துடன், அவர் மிக மோசமான — மனச்சாட்சியே இல்லாத —ஒரு பயங்கர வேடதாரியாகவும் அவனது மனக் கண்ணில் இப்போது தோற்றம் அளிக்கலானார். அதே சமயம், பாக்கியத்தம்மாளின் மீதும் அவளுடைய மகளான புஷ்பகசந்தியின் மீதும் அவனுக்கு அளவுகடந்த பச்சாத்தாபம் பொங்கி வழிந்தது.

இப்படி ஒரு பக்கம் வெறுப்பையும் இன்னொரு பக்கம் அநுதாபத்தையும் வளர்த்துக் கொண்டிருந்த நரகுவின்



மனத்தில் திடுமென்று ஒரு கேள்வி துவண்டது:

'நான் சென்னைக்குப் பயணமான அதே நாளில் பாக்கியத்தம்மாளும் வேதமூர்த்திக்கு இந்தக் கடிதத்தை எழுதக் காரணம் என்ன? ஒருநாள் அல்லது ஒரு வாரம், அல்லது ஒரு மாதம் முன்னே பின்னே இதை எழுதியிருக்கக் கூடாதா? நான் இவ்வீட்டுக்கு வந்து சேரும் அதே தினத்தில் இந்தக் கடிதமும் வேதமூர்த்தியின் கையில் கிடைக்க வேண்டும் என்று திட்டமிட்டு அவள் எழுதியது போல் அல்லவா இருக்கிறது? இதற்காகத்தான் அன்றைய தினம் — என் அம்மா பள்ளியிலிருந்து வீட்டுக்கு வருமுன் — தபாலாபீசுக்குப் போய் விட்டு வந்தாளோ? இவ்வளவு அவசரமாக இதை எழுதுவதற்கு ஏதோ ஒரு காரணம் இருப்பதாகவும், அது சீக்கிரமாகவே வெளிப்படும் என்றும் குறிப்பிட்டிருக்கிறாளே, அந்தக் காரணம் என்னவாயிருக்கும்?'

இந்தக் கேள்வியைத் தொடர்ந்து அந்தக் கடிதத்தில் இருந்த வேறொரு முக்கியமான வரியும் அவன் நினைவில் மின்னற் கொடியென நெளிந்தது.

'வாழத் தெரியாத ஒருவரை நம்பி வாழ்க்கையைப் பலியிட்டுக் கொண்ட நான்...' என்று பாக்கியத்தம்மாள் எழுதியிருக்கிறாளே, அந்த வாழத் தெரியாத ஒருவர் என்பவர் யார்? வேதமூர்த்தியா? இவரா வாழத் தெரியாதவர்? இவரை வாழத் தெரியாதவர் என்று இவருடைய தாயார்கூடச் சொல்லத் துணிய மாட்டாளே!'

நரசு ஒரேயடியாகக் குழம்பிப் போனான்.

'சற்று முன்னால் நான் ஊகித்தது போல் வேதமூர்த்தி அவ்விஷயத்தில் தொடர்பு உள்ளவரா யிருந்தால் பாக்கியத்தம்மாள் எழுதிய கடிதத்தை அவரோ, அவருடைய மனைவியோ இங்கே இந்தக் கதவிடுக்கில் இத்தனை அஜாக்கிரதையாகச் செருகி வைப்பார்களா? ... ஒருகால், அந்தப் பெண் சுகந்தி பாக்கியத்தம்மாளின் மகள் எக்கிற உண்மையை நான் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே, என் கண்ணில் படும்படியாக இங்கே அது செருகி வைக்கப்பட்டதோ?'

இனியும் இவ்விஷயமாய்ச் சிந்தித்துக் கொண்டிருந்தால் தனக்கு மூளையே குழம்பிப் போய்விடும் என்று அஞ்சியவனாய்ச் சட்டென்று எழுந்து அறைக்குள்ளாகவே உலாவலானான் நரசு.

மனோகரியும் சுகந்தியும் காரில் எங்கோ கிளம்பிச் செல்வது சன்னல் வழியாகத் தெரிந்தது. இத்தனை காலமும் கல்விகா மடத்தில் சிறைக் கைதி போல் அடைந்து கிடந்தவளான சுகந்திக்கு இந்தப் பட்டணத்தைக் கொஞ்



சம் சுற்றிக் காட்டலாமே என்று மனோகரி அழைத்துப் போகிறாள் போலும்!

நரசுவுக்கும் உள்ளே இருப்புக் கொள்ளவில்லை.

**மா**லை மணி ஐந்தேமுக்கால் இருக்கும். பல்வேறு சிந்தனைகளால் சோர்வடைந்து போன நரசுவுக்குக் காப்பி சாப்பிட வேண்டும் போல் இருந்தது. இந்தச் சாக்கிலாவது சற்று நேரம் வெளியே போய் வரலாமே என்று எண்ணியவனாய் உடனே அறைக் கதவைச் சாத்திக் கொண்டு கிளம்பி விட்டான்.

அப்போதுதான் மாடியிலிருந்து இறங்கிக் கூடத்து அறைக்கு வந்த வேதமூர்த்தி, நரசு வெளியே செல்வதைக் கண்டு ஒரு கணம் ஏதோ யோசித்துவிட்டு நேரே கௌரியம்மாள் இருந்த அறையை நோக்கி நடந்தார்.

''இவ்வளவு நேரம் உங்களைத்தான் எதிர்பார்த்துக்கிட்டிருந்தேன்; நீங்கதான் என்னை மாடிப் படியில் காலை வைக்கக் கூடாதுன்னு உத்தரவு போட்டு விட்டீங்களே!'' என்றவாறு கட்டிலிருந்து இறங்கித் தரையில் உட்கார்ந்தாள் கௌரியம்மாள்.












''ஆமாம்; அது டாக்டர் போட்டிருக்கிற உத்தரவு!'' என்று புன்முறுவலுடன் சொல்லிக் கொண்டே வந்து ஒரு நாற்காலியில் அமர்ந்தார் வேதமூர்த்தி. ''மனோகரி வர இன்னும் நேரமாகுமா?''

''அப்படித்தான் நினைக்கிறேன். நீங்க எங்கேயாச்சும் வெளியே போகணுமா?''

''நான் முன்னே உன்கிட்டே சொன்ன விஷயமாய் நம்ம டைப் கம்பெனியின் மானேஜிங் டைரக்டர் சசிவர்ணத்தோடு கலந்து பேசறதுக்காக இன்னிக்கு ஆறு மணி வாக்கில் போகலாம்னு திட்டம் போட்டிருந்தேன். ஆனால் மனோகரி மத்தியானம் ஃபோனில் கேட்டு வைச்சிருக்க அந்தத் தகவலை அறிஞ்சதும் இந்தப் பிளானைத் தள்ளி வைச்சுட்டேன்.''

சட்டென்று ஏதோ ஓர் ஆவலால் உந்தப்பட்டவள் போல் சற்றே நகர்ந்து தன் கணவரின் அருகில் வந்தாள் கௌரியம்மாள். வந்தவள் அவர் முகத்தை அண்ணாந்து நோக்கி, ''நம்ம மனோகரி சொன்ன அந்த விஷயம் நிஜமாயிருக்கும்னு நீங்க நினைக்கிறீங்களா?'' என்று தணிந்த குரலில் வினவினாள்.

''பின்னே அவள் சும்மாவா சொல்லுவாள்?'' என்றார் வேதமூர்த்தி மெல்லச் சிரித்துக் கொண்டே.

''எனக்கென்னமோ இன்னும்கூட அதை நம்ப முடியலே.''

''நானும் முதலில் அப்படித்தான் சந்தேகப்பட்டு மனோகரியைத் துருவித் துருவிக் கேட்டேன். அவள் ஃபோனில் பேசினதை அப்படியே டேப்ரிகார்டரில் போட்டுக் காட்டுவது மாதிரி பேசிக் காட்டினாள். அதுக்கப்புறம்தான் நம்பினேன்'' என்றார் வேதமூர்த்தி.

''ஒருவேளை, இந்தப் பிள்ளையாண்டான் நம்ம வீட்டில் வந்து தங்கியிருக்கிற விஷயத்தைத் தெரிஞ்சுக்கிட்டு, யாராச்சும் சும்மா உங்களைக் கோட்டா பண்ணுவதற்காக இப்படி ஃபோனில் அவரே பேசற மாதிரி பேசினார்களோ என்னமோ?''

'' சேச்சே ! அது போலெல்லாம் குறும்பு செய்யக் கூடிய ஆசாமிகள் யாரிடமும் எனக்குப் பழக்கமில்லை. அப்படியே இருந்தாலும் அவங்களுக்கு இந்தப் பிள்ளையாண்டானின் குடும்ப விஷயம் தெரிஞ்சிருக்க முடியாது. ஏன்னா, இது ரொம்பப் பழைய சமாசாரம். இவ்வூரிலே நமக்கு மட்டும் தான் தெரியும். நம்மைத் தவிர அவ்விஷயம் தெரிஞ்ச இரண்டொருத்தர் காலமாகி ஏழெட்டு வருஷங்களுக்கு மேல் ஆகிறது'' என்று பலமாக மறுத்துச் சொன்னார் வேதமூர்த்தி. ''சரி; இப்போ எதுக்கு இந்தச் சர்ச்சை? இன்னும் ஒரு நாள் போனால் அது மெய்யா, பொய்யாங்கிறது தன்னாலே தெரிஞ்சுடப் போறது!'' என்றார் சிரித்துக் கொண்டே.

'சரிதான்' என்பது போல் மெல்லத் தலையாட்டிக் கொண்ட கௌரியம்மாள் சற்றைக்குப் பின், ''ஆமாம்; இத்தனை வருஷங்களுக்கு அப்புறம் இன்னிக்கு எப்படீங்க இங்கே வந்து திமார்னு குதிச்சு இருக்க முடியும்?'' என்று வியப்பால் கண்கள் மலரக் கேட்டாள்.

''எனக்கும் அதை நினைச்சு ஒரே குழப்பமாய்த்தான் இருக்குது.''

''இவ்வளவு காலமாய் இவ்வூரிலே தான் இருந்திருப்பாரோ?''

''இருக்கலாம்; அல்லது வெளியூரிலிருந்து இன்னிக்கோ, நேத்திக்கோ ஒரு வாரம், ஒரு மாசத்துக்கு முந்தியோகூட வந்திருக்கலாம்.''

''எதுக்கு இப்படிக் கேட்கிறேன்னா..''

''புரியறது. இந்தப் பிள்ளையாண்டானும் அந்தப் பெண்ணும் நம்ம வீட்டில் வந்து இருக்கிற நாளாய்ப் பார்த்து...''

''அதேதான். இதுக்கும் அதுக்கும் சம்பந்தம் இருக்கும்னுதான் எனக்குத் தோணுது.''

''நீ என்ன நினைக்கிறே?''

''அந்தப் பாக்கியத்தம்மாள் எழுதின கடிதாசியில் ஒரு வரி இருந்ததே, அதைக் கவனிச்சீங்களா?''

''அதாவது, 'இப்போ இந்தக் கடிதம் எழுதுகிற நோக்கத்தையும் கார



"பழைமையான கரகரப்-
பான பற்பொடிகள்
உங்கள் ஈறுகளுக்கும்,
பற்களுக்கும் தீங்கு
இழைக்கக்கூடும்..!"

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பரன பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே ***சிக்கனமாக***
இருக்கும்போது பழைமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!







TP. G. 19 TM

ணத்தையும் அவசியத்தையும் நீங்களே வெகு சீக்கிரம் தெரிஞ்சுக்குவீங்க'ன்னு அவள் குறிப்பிட்டிருந்தாளே, அது தானே?''

''ஆமாம்.''

''நான் அதற்கு முதலில் வேறு அர்த்தம் பண்ணினேன். அதாவது கன்னிகா மடங்களில் அநாதையாக வளரும் ஒரு பெண்ணைப் பத்தொன்பது வயசானதும் கன்னிகா ஸ்திரீயாக்கும் முயற்சி மேற்கொள்ளப்படும் — அதனால் தன் மகளும் அம்மாதிரி ஆவதற்கு முன் அங்கிருந்து மீட்டுக் கொண்டு வந்துடணும் — இதை நானே நேரில் போகும் போது தெரிஞ்சுக்குவேன் — என்கிற அர்த்தத்தில் அப்படி எழுதினாளோன்னு நினைச்சேன். ஆனால் இன்னிக்குக் கிடைச்ச இந்தத் தகவலை வைச்சுப் பார்க்கும்போது...''

கௌரியம்மாள் குறுக்கிட்டு, ''அது இருக்கட்டும்; இந்தத் தகவல் நிஜமாகவே இருந்ததுன்னா, நீங்க என்ன செய்யப் போறீங்க? அதுபற்றி ஏதனுச்சும் தீர்மானம் பண்ணியிருக்கிறீங்களா?'' என்று மிகவும் அக்கறையாக வினவினாள்.

''எது பற்றிக் கேட்கிறே?''

''முதலில் அந்தப் பெண்ணைப் பற்றிச் சொல்லுங்க!''

''நேத்திக்கும் இன்னிக்கும் நடந்த விவரங்களை அவளின் தாயார்க்காரிக்குத் தெரிவிச்சு, மேற்கொண்டு என்ன செய்யறதுன்னு அவளிடமே யோசனை கேட்டுக் கடிதம் எழுதலாம்னு நினைச்சிருந்தேன்.''

''கடிதமா?''

''ஏன்? மதுரத்தம்மாளிடம் அது கிடைச்சுட்டால் வம்பாயிடுமேன்னு நினைக்கிறயா? தபால் போகிற நேரத்துக்கு அந்த அம்மாள் வீட்டிலே இருக்க மாட்டாள்; பள்ளிக்கூடத்துக்குப் போய் விடுவாள்.''

''சரி; அப்புறம்?''

''அந்த யோசனையை இப்போ கை விட்டுட்டேன்.''

''எதுக்கு?''

''நாளை ராத்திரி அவர் இங்கே வந்த பின் என்ன நடக்குதுன்னு பார்த்துக்கிட்டு அப்புறம் கடிதம் எழுதலாம்னு நினைக்கிறேன்.''

''அதுவும் சரிதான்'' என்று உடனே ஆமோதித்த கௌரியம்மாள், ''அப்புறம்... நம்ம பெண் விஷயமா?...'' என்று முகத்தில் ஒரு மகிழ்ச்சி யொளி பரவக் கேட்டாள்.

''இதிலேதான் கொஞ்சம் குழப்பம் ஏற்பட்டு விட்டிருக்குது!'' என்று எங்கேயோ பார்த்தவாறு சற்றுக் கரகரப்பான குரலில் கூறினார் வேதமூர்த்தி.

''தெரியுமே! நீங்க இப்படித்தான் பேசுவீங்கன்னு எனக்குத் தெரியும்.''

''அமைதி! அமைதி!'' என்று தம் மனைவியைக் குறும்பாகப் பார்த்துச் சிரித்தார் வேதமூர்த்தி. ''டாக்டர் சொன்னது ஞாபகம் இருக்கட்டும்.''

கௌரியம்மாளின் முகத்தில் கவலை சூழ்ந்தது. சிறுபொழுது மௌனமாயிருந்த அவள், ''ஆரம்பத்திலிருந்தே உங்களுக்கு இந்த விஷயத்தில் அவ்வளவு அக்கறை இல்லேங்கிறது எனக்குத் தெரியும்'' என்றாள் கம்மிய குரலில்.

''ஒப்புக்கொள்கிறேன்.''

''ஊரார் காரியங்களில்தான் உங்களுக்கு எப்பவுமே கவலை.''

## அரண்மனைகள் ஓட்டல்களாகின்றன!



★ இந்தியாவில் முதன் முதலாக ஒரு மகாராஜாவின் அரண்மனை ஹோட்டலாக மாறியது காஷ்மீரில் தான். ஜெய்பூர் மகாராஜா அடுத்தபடியாக ராம்பாக் அரண்மனையை ஹோட்டல் தொழிலுக்குக் கொடுத்தார். மூன்றாவதாக உதய்பூர் ராஜா இந்தத் துறைக்குத் தம் அரண்மனையை அர்ப்பணித்தார்.

ராஜஸ்தானிலுள்ள ஜோத்பூர் அரண்மனையை மாபெரும் ஹோட்டல் நிறுவனமாக்கும் முயற்சியில் ஓபராய் ஸ்தாபனம் ஈடுபட்டிருக்கிறது. அடுத்துப் பிகானீர் அரண்மனையும், ஜெய்ஸால்மர் அரண்மனையும் அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகளை ஈர்க்கும்வண்ணம் ஹோட்டல்களாக மாறும்!

ஆதாரம்: இந்தியன் ஹோட்டல்கீப்பர் அண்டு டிராவலர்.

★ இதைப் படிக்கும்போது நமக்கு அண்மையில் சென்னைக்கு வந்திருந்த ராஷ்டிரபதி திரு வி. வி. கிரி கூறியது நினைவுக்கு வரத்தான் செய்கிறது. அகில இந்திய ஓட்டல் மகா நாட்டின் போது (படம்) அவர், 'பெரிய ஹோட்டலாக அமைப்பதில் அதிக சிரத்தை கொள்ளாதீர்கள். அது எதிர்பார்க்கிற நற்பலன் தராது' என்றார். சிந்தனைக்குரிய விஷயம். பெரும்பாலான அயல்நாட்டு சுற்றுலாப் பயணிகள் பெருஞ் செல்வந்தர்கள் அல்ல. கஷ்டப்பட்டுச் சேமித்து வைத்துப் பயணத்தை மேற்கொள்கிறவர்களே. குறைந்தபட்ச வசதிகளுடன் கூடிய சுத்தமான அறைகளையும் பண்பான வரவேற்பையும் உதவுகிற மனப்பான்மையையும் தான் அவர்கள் ஹோட்டல்களில் எதிர்பார்க்கிறார்கள். ஆடம்பரத்தை அல்ல.

★ 1973ல் முதல் ஏழு மாதங்களில் இந்தியாவுக்கு வந்த அயல்நாட்டுச் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை 2,23,855. இது 25 சதவிகிதம் கூடுதல். இந்திய சர்க்கார் இந்த 1973 வருஷத்துக்கு எதிர்பார்க்கும் அந்நிய நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் நாலு லட்சம். இவர்கள் அத்தனை பேருமா ஆடம்பரப் பிரியர்கள்?

பி. எஸ். எம்.

## மகாராஜா வேஷம்!



☐ சர்வதேச ஹோட்டல் கழகத் தலைவர் ஜீன் ஆர்ம் வீட் சென்னையில் நடந்த பன்னிரண்டாவது அகில இந்திய ஹோட்டல், ரெஸ்டாரெண்ட் கழக மகாநாட்டுக்கு வந்திருந்தார். முதலில் டில்லியில் இவர் வந்திறங்கியதும் ஓபராய் ஹோட்டல் அதிபர் இவருக்கு வரவேற்புக் கொடுத்தார். தமக்குப் பணிவிடை புரிய அமர்த்தப்பட்டிருப்பவரைக் கண்டு ஜீன் ஆர்ம்வீடருக்கு ஒரே மகிழ்ச்சி. மகாராஜா ஒருவரே தமக்குப் பணிவிடை புரியக் கிடைத்திருக்கிறாரென்றால் அவருக்கு ஒரே ஆனந்தம்தானே. பக்கத்தில் நின்ற ஹோட்டல் அதிபர் ஓபராயிடம், இதைப்பற்றி அவர் கூறி மகிழவே, "ஐயா! இவர் மகாராஜா இல்லை. எங்கள் ஹோட்டல் பணியாளர்தான்! உடையைப் பார்த்து ஏமாறுகிறீர்கள்" என்றார் ஓபராய்.

- பன்னிரண்டாவது அகில இந்திய ஹோட்டல், ரெஸ்டாரெண்ட் மகாநாட்டு உரைகளிடையில் ஒரு சாரமான துணுக்கு இது. அது சரி! மகாராஜா என்று நினைத்து ஏமாறக்கூடிய அளவுக்கு அந்தப் பாணியில் ஹோட்டல் ஊழியர்களுக்கு உடை தைத்துத் தரவேண்டுமா? பண்புக் குறைவாகப் படுகிறதே!

---

"அதனால் நாம் ஒண்ணும் கெட்டுப் போகலே!" என்று அலட்சியமாகச் சொன்னார் வேதமூர்த்தி. "அதனதன் விதி எப்படி இருக்குதோ அப்படித்தான் நடக்கும்."

அவரைச் சமாதானப் படுத்துவது போல் புன்சிரிப்புடன் ஏறிட்டுப் பார்த்த கௌரியம்மாள், "எல்லாம் விதிப்படி நடந்துட்டுப் போகட்டும்னு நினைச்சா, இன்னிக்குச் சாயந்திரம் அந்தச் சிவர்ணத்தை எதற்காகப் போய்ப் பார்க்கணும்னு பிளான் போட்டீங்களாம்?" என்று கேட்டாள்.

"ஓ....அதுவா? அது நாம் செய்ய வேண்டிய முயற்சியைச் செய்து வைக்கலாமேன்னுதான்."

"இந்த விஷயமாய் அந்தப் பிள்ளையாண்டான்கிட்டே முதலில் பேசிடணும்னு சொன்னீங்களே?"

"ஆமாம்; நேத்திக்கு ராத்திரியே பேசணும்னு நினைச்சேன். சந்தர்ப்பம் சரியாயில்லே. அப்புறம் இன்னிக்குக் காலம்பற ஆள் வெளியே போயிட்டான். மத்தியானம் கம்பெனியிலிருந்து வந்ததும் நேரே அதுக்குத்தான் அவனுடைய அறைக்குப் போனேன். பேச்சை ஆரம்பிக்கும்போது மனோகரி வந்து கூப்பிடவே எழுந்து வந்து விட்டேன். இப்படி மூணு முறை தடங்கலானதும் நல்லதற்குத்தான்னு இப்போ நினைக்கிறேன்."

"ஓ...நாளைக்கு அவர்..."

"இங்கே வந்ததும் அவரிடம் பேசி நோட்டம் பார்த்துவிட்டுப் பிறகு இவன்கிட்டச் சொல்றது நல்லதில்லையா?"

கௌரியம்மாளின் முகத்தில் கவலை படர்ந்தது. அவள் மௌனமாய் ஏதோ யோசனையில் ஆழ்ந்தாள்.

"இன்னும் ஒண்ணு சொல்ல மறந்து விட்டேன்" என்றவாறு தம் சட்டைப் பையிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்த வேதமூர்த்தி, "இதோ பார்! காலையில் இதுபற்றி நான் உன்கிட்டே சொன்ன மாதிரியே நடந்துட்டது" என்றார் புன்முறுவலுடன். அது பாக்கியத்தம்மாள் அவருக்கு எழுதியிருந்த கடிதம்.

"அப்படியா? அந்தப் பிள்ளையாண்டான் இதைப் படிச்சுட்டானா?" என்று தன்னை மீறிய ஆவலுடன் வினவினாள் கௌரியம்மாள்.

"ஊம்" என்றார் வேதமூர்த்தி.

"எப்படி அவ்வளவு நிச்சயமாய்ச் சொல்றீங்க?"

"காலையில் நான் இதை அவனுடைய அறைக் கதவின் இடுக்கில் செருகி வைச்சுட்டுப் போய், திரும்பி வந்தவுடன் பார்த்தேன். இது அங்கே இல்லே. அப்புறம் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் இது அதே இடத்தில் கொஞ்சம் வேறு மாதிரியாய்ச் செருகப்பட்டிருந்தது."

"இந்த விஷயத்தை அவனுக்கு இதுக்குள்ளே தெரியப்படுத்தினது அவ்வளவு சரியில்லேன்னு நினைக்கிறேன்."

"வாஸ்தவம். மத்தியானம் ஃபோனிலே வந்த தகவல் காலம்பற வந்திருந்தால் இதைத் தெரியப்படுத்தியிருக்க மாட்டேன். ஆனாலும் பரவாயில்லே."

வாசலில் கார் வந்து நின்றது. புதுத் துணிமணிகள் அடங்கிய அட்டைப் பெட்டிகளையும், காகித உறைகளையும் கைநிறைய அடுக்கிக் கொண்டு மகிழ்ச்சியுடன் உள்ளே வந்தாள் சுகந்தி. மனோகரியைக் காணோம்.

"மனோ எங்கே சுகந்தி?" என்று கேட்டவாறு எழுந்து வந்தாள் கௌரியம்மாள்.

"கடைக்குப் போய்விட்டு வருகிற வழியில் அக்கா இறங்கிட்டாங்கம்மா. என்னமோ, காந்தி சமாஜமாமே, அங்கே போகிறதா உங்ககிட்டே சொல்லச் சொன்னாங்க" என்றாள் சுகந்தி.

கௌரியம்மாள் கூடத்து அறைப் பக்கம் வந்து எட்டிப் பார்த்தாள். நரசுவின் அறைக் கதவு இன்னமும் சாத்தியே கிடந்தது. (தொடரும்)



இந்த ஆண்டின்
குமரன்
புதிய டிசைன்கள்
முக்கனி • மனோரன்சிதம்
நீலவானம் • சுமங்கலி
புதிய கலர்கள்
பசுங்கிளி • ஸ்ரீ தேவி
நவ நாகரீக நங்கைகள் தேர்ந்தெடுப்பது
குமரன்
பட்டுப் புடவைகளே!
குமரன் சில்க்ஸ்
(பனகல் பார்க் எதிரில்)
தி. நகர், சென்னை-600017
போன்: 443544
தயாரிப்பு நிலையங்கள்:
காஞ்சீபுரம் & ஆரணி
Sarath



# வீரவாஞ்சி

நஜன்

**இப்போது தியாகி வாஞ்சி அய்யர் மீது எல்லோருக்கும் அக்கறை ஏற்பட்டிருக்கிறதல்லவா ? இதோ. அவரைப் பற்றிய சில ரசமான விவரங்கள் :**

'நம் நாட்டு குற்றால அருவியில் இந்த வெள்ளையர் குளிக்கும்போது நாம் அந்தப் பக்கம் போகக் கூடாதாமே! இது என்ன இவங்க அப்பன் வீட்டுச் சொத்தா?' - இம் மாதிரி மனக் கொதிப்பு திருநெல்வேலி வாசிகள் ஒவ்வொருவருடைய மனத்திலும் குமுறிக் கொண்டு வந்தது. இந்த நிறத் திமிரை ஒழித்துக் கட்ட வேண்டும் என்று அன்றே தீர்மானித்துக் கொண்டவர் வீரவாஞ்சி.

அந்தக் காலத்தில் ஒரு தாலுகா ஆபீசில் அவர் குமாஸ்தாவாகப் பணியாற்றி வந்தார். தேச பக்தி வெறி போதாதற்கு இளமைத் துடிப்பு.

தாம்பிரபரணிக் கரையில் மாபெரும் கூட்டம். வ.உ. சிதம்பரம் பிள்ளையும், சுப்பிரமணிய சிவாவும் மிகவும் உணர்ச்சி பொங்கப் பேசியதை வாஞ்சி கேட்டார். 'இனியுமா நாம் வாளாவிருப்பது?' என்ற எண்ணம் அவரை உந்தியது. அவரும் அவருடைய சகாக்களும் வன்முறையில் இறங்குவதைத் தவிர வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டனர். இதனால் ஏற்பட்ட விளைவு பாரி கம்பெனியிலிருந்த சாம்பெயன், கெமரான் என்ற வெள்ளையர்கள் தாக்கப் பட்டனர். அக்காலத்தில் திருநெல்வேலியில் நடைபெற்று வந்த சி. எம். கல்லூரி முதல்வராய்ப் பணியாற்றிய ஷாப்டர் துரையை 'வந்தே மாதரம்' என்று சொல்ல வைத்தனர். நகராட்சிக் கட்டடத்துக்குத் தீ வைக்கப் பட்டது. அப்போது மாவட்டக் கலெக்டரான விஞ்ச் துரை துப்பாக்கியால் சுட்டுக் கூட்டத்தைக் கலைத்தார்.

இதற்குப்பின்னும் விஞ்சு துரை அங்கு சில நாட்கள்கூடப் பதவியில் இருக்க முடிய வில்லை. அங்கு அனுப்பப்பட்ட அடுத்த கலெக்டர் பதவி ஏற்கும்போதே இந்தச் சுதந்திர இயக்கத்தை நசுக்கிப் பிரிட்டிஷ் அரசாங்கத்தினிடமிருந்து நல்ல பெயர் வாங்க வேண்டும் என்ற நோக்கத்துடன் வந்தார். ஆகவே, எதற்கெடுத்தாலும் அடக்குமுறை தாண்டவமாடியது. சிதம்பரனாரும் சிவாவும் செய்த வீரப் பேச்சுக்கள் இவனுக்கு நாராசமாக ஒலித்தன.

புரட்சி இயக்கத்தை வளர்த்ததுடன் ஏகாதிபத்திய எதிர்ப்பாளருக்கு உதவி செய்தார் என்று குற்றம் சாட்டப்பட்டுச் சிதம்பரம் பிள்ளை கைது செய்யப்பட்டார். இவர் விசாரணையில் செஷன்ஸ் நீதிபதி பின்ஹே பின்வருமாறு குறிப்பிட்டது வாஞ்சியின் மனக் கொதிப்பை அதிகரித்து விட்டது.

''இந்தியாவில் புரட்சியை எழுப்ப இந்தியர்களுக்குச் சட்டரீதியான உரிமை இல்லை. ஏனெனில், பிரிட்டிஷாருக்குள்ள வாக்குரிமை இந்தியர்களுக்கு வழங்கப் படவில்லை. அடிமை இந்தியனுக்குச் சட்டம் போடக்கூட உரிமை இல்லை.''

இந்த ஏகாதிபத்தியக் கருத்தும் சிதம்பரனாருக்குக் கிடைத்த இருபது ஆண்டுக் கடுங்காவலும் இனியும் சும்மா இருப்பதில் பயனில்லை என்ற தீர்மானத்துக்கு வரும்படி செய்து விட்டது. (இந்த இருபது ஆண்டுச் சிறைத் தண்டனையைச் சென்னை நீதிமன்றம் ஆறு ஆண்டுகளாக்கியது.)

கொதிப்படைந்த இளைஞர்கள் குற்றாலத்தில் கூடினர். இங்கு செய்த முடிவுதான் கலெக்டர் ஆஷ் துரையை எப்படியும் தீர்த்துக் கட்டுவதென்பது. இந்தக் கூட்டத்தில் முக்கியமாகக் கலந்து கொண்டவர்கள் நீலகண்ட பிரும்மசாரி (இருபத்தொரு வயது) சங்கர கிருஷ்ணய்யர், மடத்துக்கடை சிதம்பரம் பிள்ளை, கப்பையாப் பிள்ளை, பிச்சுமணி

அய்யர், அழகப்பன் (பதினெட்டு வயது) சாவடி அருணாசலம் முதலியவர்கள். இவர்களுக்கெல்லாம் ஆயுதப் பயிற்சி அளித்தவர் வ. வே. சு. அய்யர் தான்.

இத்தகைய ஆயுதப் பயிற்சி பல இரகசிய இடங்களில் தரப்பட்டன. அய்யனூர் ரயில்வே நிலையத்திலிருந்து ஏழு மைலில் உள்ள பஞ்சதாங்கியில் மலையடிவாரத்தில் நாற்பது ஏக்கர் நிலத்தில் வெள்ளையர்களின் தலையை அறுவடை செய்யத் துப்பாக்கிப் பயிற்சி இளங் காளைகளுக்கு அளிக்கப்பட்டது. இது ஒன்றுதான் வெளிக்குத் தெரிய வந்தது. இம்மாதிரி எவ்வளவு பயிற்சிக் கழகங்கள் இருந்தனவோ தெரியாது.

குற்றாலம் இரகசியக் கூட்டத்தில் ஆஷ் துரையைக் கொல்வது 'நான்தான்' என்று பலர் முன்வந்தனர். ஆகவே திருவுளச் சீட்டு போடப்பட்டது. அதில் வாஞ்சியின் பெயரே வந்தது.

அங்கேயே வாஞ்சி ஒரு கடிதத்தை எழுதினான்.

''வெள்ளையர்கள் நம் தேசத்தை அபகரித்ததுடன் மட்டும் இன்றி நமது சநாதன தர்மத்தையும் காலில் போட்டு நசுக்கி அழிக்கிறார்கள். இன்று ஒவ்வோர் இந்தியனும் நமது எதிரியான ஆங்கிலேயனை இங்கிருந்து துரத்தித் தர்மத்தையும் சுதந்திரத்தையும் நிலைநாட்ட முற்பட்டிருக்கிறான். ராமனும், கிருஷ்ணனும், அர்ஜுனனும், சிவாஜியும், குருகோவிந்த சிம்மனும் வாழ்ந்து ஆண்ட இந்நாட்டிலே ஒரு வெள்ளை மிலேச்சனை ஐந்தாம் ஜார்ஜுக்குப் பட்டம் கட்ட ஆடம்பரமான ஏற்பாடுகள் நடைபெறுகின்றன.

இந்த நாட்டில் அவன் காலடி எடுத்து வைத்ததும் அந்த ஜார்ஜைக் கொல்வதாக நாங்கள் மதராஸிகள் மூவாயிரம் பேர்கள் சபதம் கொண்டுள்ளோம். அவர்கள் அனைவரிலும் எளியேனான நான் அதற்கு முன்னறிவிப்பாக இச் செயலைச் செய்தேன். இதுதான் இன்று இந் நாட்டில் உள்ள ஒவ்வொருவருடைய கடமையாகும்.''

பின்னர் 1911ம் ஆண்டு ஜூன் மாதம் 17ந் தேதி மணியாச்சி ரயில் நிலையத்தில் ஆஷ் கொலை செய்யப்பட்டது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். வாஞ்சி அவனைக் கொன்று விட்டுத் தம்மையும் சுட்டுக் கொண்டு மாண்டார்.

* * *

**வா**ஞ்சி அய்யரின் உண்மைப் பெயர் சங்கரய்யர். செங்கோட்டையைச் சேர்ந்தவர். இவருக்கு இளம் வயதிலேயே திருமணம். அப்போது இவர் மனைவிக்கு ஆறு வயது. திருவாங்கூரில் புனலூர் என்ற இடத்தில் காட்டிலாகாவில் வாஞ்சி வேலை செய்த போது மனைவி பருவமடைந்து இவருடன் வாழ வந்தாள். (1909ல்) இவர் ஒழுங்காக வேலைக்குப் போகாததால் வேலையிலிருந்து நீக்கப்பட்டார். அப்போது இவருக்கு வயது முப்பது. வேலை தேட வேண்டிய அவசியம் நேரவே மனைவியை அவள் பெற்றோர்கள் வீட்டில் விட்டுவிட்டுப் புறப்பட்டார். அதற்குப் பின் அவளை அவர் சந்திக்கவேயில்லை.

மாபெரும் தியாகத்தை அவர் பிறர் வாழ, நாடு சுதந்திரம் பெறச் செய்தார். வாழ்க, வாஞ்சியின் நாமம்.

# கம்பனுக்குக் கவிஞன் காணிக்கை



''நல்லென்ற ஒலிகொண்டே
ஓடிவரத் தமிழ்வெள்ளம்
நில்லென்று தடுத்துன்றன்
நெறியே அதைத் திருப்பி
வெல்லென்ற குரலெடுத்து
விசையூட்டிக் கடலாக்கிச்
செல்லென்று விடுத்தனை நீ
திசைவணங்கி வரவேற்க !

திசைவணங்கும் உன்பெயரைத்
திருவணங்கும் உன்சொல்லை
இசைவணங்கும் செந்தமிழின்
இயல்வணங்கும் திறல்மிமன்

தசைவணங்கும் கட்டுடலைத்
தரைவணங்கி நின்றதுபோல்
மிசைவணங்கும் உன்பாட்டை
மிகவணங்கி வாழ்த்துவலே

பண்ணுக்குப் பண்தந்தும்
பயன்தந்தும் செந்தமிழ்ர்
கண்ணுக்குக் கண்தந்தும்
கதிதந்தும் நீசென்ற
விண்ணுக்கு மதிதந்தும்
விறலிக்கே இகழ்தந்தும்
எண்ணுக்குக் கடல்தந்தும்
எமக்கிதயம் தந்தாய்நீ!''

கவிச்சக்கரவர்த்தி கம்பனுக்குக் காணிக்கையாக இந்தத்தமிழ்ப் பாடல்களை இயற்றிய கவிஞர் தமிழ் ஒளி இப்பொழுது நம்மிடையே இல்லை. சொல் நயம், பொருள் நயம், ஓசை நயம் யாவும் கொண்டு அவரது கவிதைகள் பீடு நடை போடுகின்றன.

கவிஞர் தமிழ் ஒளியின் ஐம்பதாவது பிறந்த நாள் 21-9-73 அன்று அவர் நண்பர்களால் அமைதியாகக் கொண்டாடப்பட்டது. அக்டோபர் மாதம் கவிஞரின் பொன் விழாவைச் சிறப்பாகக் கொண்டாட அவரது அன்பர்கள் ஏற்பாடுகளைச் செய்து வருகிறார்கள். தமிழ் ஒளிக்கு நமது காணிக்கையாக இப்பாடல்களை வெளியிட்டிருக்கிறோம். விழா இனிதே நிறைவேறட்டும்.

# மாய உலகிலிருந்து மீண்டவர்!




கருணாநிதி நகரில் அந்தப் பங்களாவைத் தேடிக் கண்டுபிடிப்பதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது! ''எல். எஸ். டி. பழக்கத்துக்கு அடிமையாகி, என்னிடம் சிகிச்சைக்கு வந்து, தற்போது குணமடைந்து நல்ல நிலைமையில் உள்ள விஷ்ணு மோகனை நீங்கள் போய்ப் பேட்டி காணுங்கள்'' என்று கூறி என்னை அனுப்பியிருந்தார் டாக்டர் ராவ். எப்படியோ வீட்டைக் கண்டுபிடித்து விஷ்ணு மோகனையும் சந்தித்தேன். டாக்டர் ராவின் பெயரைச் சொன்னதும் விஷ்ணு மோகன் தங்கு தடையின்றித் தம் அனுபவங்களைக் கூறத் தொடங்கினார். ''ஒரே ஒரு கோரிக்கை! என் பெயரை மட்டும் மாற்றி விடுங்கள்'' என்ற அவரது வேண்டுகோளுக்கு மதிப்பளித்தே இதை எழுதுகிறேன்.

''நீங்கள் எல். எஸ். டி. அருந்தும் பழக்கத்தைக் கைவிட்டு எவ்வளவு மாதங்கள் இருக்கும்?''



''பதினெட்டு, பத்தொன்பது மாதங்கள் இருக்கும்.''

''அது எப்படி உங்களுக்குப் பழக்கமாயிற்று?''

''கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் போதுதான். ஒரு நண்பன் கொடுத்தான். முதல் தடவை அவன் கொடுத்தபோது வேண்டா வெறுப்பாக உட்கொண்டேன். அப்புறம் நானே அவன் அறையைத் தேடிக் கொண்டு போக ஆரம்பித்தேன். நாலைந்து மாதங்கள் அவன் எனக்குத் தொடர்ந்து 'எல். எஸ். டி. — 25' மாத்திரைகளைக் கொடுத்து வந்தான். எனக்குச் செலவு நிறைய ஆயிற்று. ஆனால் பணத்தைப் பற்றி எனக்கு லட்சியமே இல்லாமல் இருந்த காலம் அது!''

''முதல் அனுபவம் எப்படி இருந்தது? விளக்கமாகச் சொல்லுங்கள்.''

''ஆகாசத்தில் பறப்பது போலிருந்தது. விண்வெளிப் பயணிகள் சொல்கிறார்களே — வெய்ட் லெஸ்னஸ் — என் உடலின் கனத்தையே நான் உணராத நிலை ஏற்பட்டது. ஆனால் கண்ணெதிரில் நடப்பதெல்லாம் நன்றாகவே தெரிந்தது. நண்பர்களை, சூழ்நிலையை என்னால் நன்கு இனம் கண்டுகொள்ள முடிந்தது. நாளடைவில் நிலைமை மாறியது. விசித்திரமான காட்சிகள் — கனவில்கூடக் காண முடியாத அற்புதமான கற்பனைத் தோற்றங்கள் — கண்ணெதிரே நிகழ்வது போலவே தோற்றமளித்தன. (படம்) ஹாஸ்டல் மாடிப் படியில் பல முறை கால்கள் தடுமாறி உருண்டு விழுந்திருக்கிறேன். வகுப்பில் உட்கார்ந்திருக்கும்போது என் கண்கள் தொலை தூரத்தில் உள்ள சூன்யத்தை வெறித்துப் பார்க்கும். பாடங்கள் சரிவர மனத்தில் பதியவில்லை. படிப்பையே நிறுத்தி விட்டேன். அதாவது கல்லூரிக்குப் போவதையே நான் நிறுத்தி விட்டேன்.''

''அப்போது நீங்கள் எங்கே படித்துக் கொண்டிருந்தீர்கள்?''

''பம்பாய் ...கல்லூரியில். எனக்கு எல். எஸ். டி. மாத்திரைகளைக் கொடுத்துப் பழக்கப்படுத்திய என் கல்லூரி நண்பனிடம் 'ஸ்டாக்' தீர்ந்து விட்டது. 'கோவாவில் கிடைக்கிறதாம்' என்று அவன் சொன்னான். கோவாவுக்குப் போனேன். அங்கு சில ஹிப்பிகள் எனக்குப் பழக்கம் ஆனார்கள். அவர்களுடன் நேபாளத்துக்குப் போனேன். சிறிது காலம் அங்கு தங்கி விருந்தேன்.



## கறுப்புப் பணம் கருணைப் பணமாகிறது

ஸ்கேண்டிநேவியாவில் அரசாங்கம் கறுப்புப் பணத்தை வெளிக் கொண்டு வந்து, அதே சமயத்தில் அந்தப் பணத்தினால் ஏழைகள் பயனடையப் புதிய திட்டம் ஒன்றை அமுலாக்கியுள்ளது. ஒரு குடும்பத்துக்கு முக்கியமான தேவைகளை உடைய சிறிய வீடுகளுக்கான வரை படங்களும் (Blue Prints) நிலமும் அரசாங்கம் கொடுத்து உதவி, கறுப்புப் பணம் உள்ளவர்கள் எத்தனை வீடுகள் வேண்டுமானாலும் கட்டி ஏழைகளுக்கு உதவலாம் என்றும் பணம் எங்கிருந்து வந்தது எனக் கேள்வி கேட்கப்பட மாட்டாது என்றும் அறிவித்தது.

உடனே பல தனவான்கள் தாங்களாகவே முன் வந்து நிறைய வீடுகள் கட்டித் தங்கள் நாட்டின் ஏழைத் தோழர்களுக்கு உதவினார்கள். பணக்காரர்களுக்கு ஒரு நல்ல காரியம் செய்யச் சந்தர்ப்பமும் ஏழைகளுக்கு உதவி பெறும் வாய்ப்பும் கிட்டின.

ஆதாரம்: சங்ஸ் வீக்லி
தகவல்: சரோஜா நரசிம்மன்

---

எனது புதிய நண்பர்களின் உதவியால் அவ்வப்போது எல். எஸ். டி. கிடைத்து வந்தது. ஆனால் பணந்தான் கிடைக்கவில்லை. 'நான் நேபாளத்தில் எல். எஸ். டி.யின் மயக்கத்தில் சுகமாக ஆழ்ந்து கிடக்கிறேன். தட்டின்றிப் பணம் அனுப்பிக் கொண்டிருக்கவும்' என்று தகப்பனாருக்கு எழுத முடியுமா? என் புதிய ஹிப்பி நண்பர்கள் நேபாளத்திலிருந்து விரட்டப்பட்டனர். தில்லிக்கு வந்து சில நாட்கள் இருந்துவிட்டு பம்பாய்க்குத் திரும்பினேன். ஒரு வருடப் படிப்பு வீணாயிற்று. பரீட்சையில் ஃபெயில் என்று அப்பாவுக்கு எழுதி விட்டேன்.''

''அவர் நம்பினாரா? உங்களைச் சந்தேகிக்க வில்லையா? உங்கள் நடவடிக்கைகளைப்பற்றி அவருக்கு எதுவுமே தெரியாதா?''

''அப்போது அவர் கவலைப்படவில்லை. நான் தாயில்லாப் பிள்ளை என்பதால் கேட்ட போதெல்லாம் அவர் பணம் அனுப்பிக்கொண்டிருந்தார். என் இளைய தாயார் இதை விரும்பவில்லை. எனினும் தடுக்கவில்லை! அது ஒன்றுதான் அவர் செய்த பெருந் தவறு! பல பணக்காரக் குடும்பங்களில் இப்படித் தான் பெற்றோர்கள் பொறுப்பின்றி யிருக்கிறார்கள். பிள்ளைகளிடம் அளவுக்கு மீறிச் செல்வம் கொடுத்து அவர்களுக்குக் கணக்கு வழக்கில்லாமல் பணம் கொடுக்கிறார்கள். பம்பாயில் ஹாஸ்டலில் தங்கிப் படித்த ஒரு பெரிய குடும்பத்துப் பெண் 'எல்.எஸ்.டி.-25' சாப்பிட்டு வந்தது எனக்குத் தெரியும். எவ்வளவுதான் பெற்றோர்கள் செல்வர்களாக இருந்தாலும், பிள்ளை குட்டிகள் கல்லூரியில் படிக்கும்போது ஊதாரித்தனமாகச் செலவழிக்கும் அளவுக்குப் பணம் கொடுக்கக் கூடாது.''

''நீங்களே அறிவுரை வழங்குகிறீர்களே?'' என்றேன் சிரித்தவாறு.

'' அநுபவப்பட்டவர்கள்தாமே அறிவுரை வழங்க முடியும்? என் மூளையையே பாதித்து விட்டது இந்த எல்.எஸ்.டி. பழக்கம். அதைக் கைவிடுவது எனக்கு எளிதாக இருக்கவில்லை. ஆறு மாதங்கள் பித்துப் பிடித்த நிலையில் இருந்திருக்கிறேன். — நர்ஸிங் ஹோமில்.''

''உங்களுடைய ஹிப்பி நண்பர்கள் இதை ஏன் பழக்கப்படுத்திக் கொண்டார்கள் என்று நீங்கள் கேட்டதுண்டா?''

''எல். எஸ். டி. — 25 சாப்பிட்ட ஒவ்வொருவரின் அநுபவமும் ஒவ்வொரு விதமாயிருக்கும். எல். எஸ். டி. யின் போதை தெளிந்தபிறகு தான் கடவுளையே பார்த்த தாகச் சொன்னான் ஒருவன். 'நான் யார்?', 'வாழ்க்கையின் உட்பொருள் என்ன?' என்ற கேள்விகளுக்கெல்லாம் விடை கண்டுவிட்ட தாகக் கூறுகிறான் இன்னொருவன். நான் அந்த அளவுக்குப் போகவில்லை. அதற்குள் மீண்டு விட்டேன். உங்களுக்கு ஒன்று தெரியுமா, இதைப் பற்றி? இதனைக் கண்டுபிடித்த விஞ்ஞானியே இதன் ஆற்றலை அநுபவித்து மயங்கி யிருக்கிறார்...''

''யார் அது?''

''மருந்துகள் தயாரிக்கும் பிரபல நிறுவனமொன்றில் பணியாற்றி வந்த ஆல்பர்ட் ஹாஃப்மன் என்பவர் இருபத்தெட்டு வருடங்களுக்கு முன் லேசர்ஜிக் அமிலத்திலிருந்து சில மருந்துச் சேர்க்கைகளைத் தயாரித்துச் சோதித்துக் கொண்டிருந்தபோது அவர் சருமத்தின் வழி அவரையும் அறியாமல் இம்மருந்து உடலுக்குள் சென்றதாம். அதன் விளைவாக அவரது உடலில் அதுவரை அவர் அநுபவித்தறியாத ஒருவிதக் கிளர்ச்சி ஏற்பட்டதாம். அதை உணர்ந்ததும் அவர் மேலும் சிறிதளவு உட்கொண்டாராம். உடனே அவர் தம் வயமிழந்து எங்கேயோ சஞ்சரிப்பது போன்ற உணர்ச்சிகளில் ஆழ்ந்து விட்டாராம். மருந்தினால் ஏற்பட்ட போதை தெளிந்த பிறகு காலம், தூரம் இவற்றைக் கடந்த நிலையில் தாம் சஞ்சரித்ததாகத் தெரிவித்தாராம். எனக்குச் சிகிச்சை அளித்த டாக்டர்தான் இதையெல்லாம் பற்றி எனக்குப் பின்னர் கூறினார். இம்மருந்தை ஓர் இராணுவ ஆயுதமாகவும் பயன்படுத்தும் சாத்தியக் கூறுகள் உள்ளனவாம். போர்க்காலத்தில் எதிரியின் நாட்டிலுள்ள குடிநீர்த் தேக்கங்களில் இவற்றைக் கலந்து விட்டால், அந்த நீரைப் பருகிய மக்கள் அனைவருமே செயலிழந்து விடுவார்களாம். போர்வீரர்கள் பகைவர்களை எதிர்த்துப் போர் புரியும் ஆற்றலையே தாற்காலிகமாக இழந்துவிட ஏதுவுண்டாம். எளிதில் எதிரியின் நாட்டையே கைப்பற்றி விட முடியுமாம்'' என்றார் விஷ்ணுமோகன்.

''உங்களை இது எந்த அளவுக்கு ஆட்டிப் படைத்திருக்கிறது என்பதைக் கொண்டே இதன் பயங்கர ஆற்றலை ஊகிக்க முடிகிறது. உங்கள் அநுபவங்களை எடுத்துரைத்ததற்கு மிக்க நன்றி, மிஸ்டர் விஷ்ணு மோகன்!'' என்று கூறி விடைபெற்றேன்.

பேட்டி: **'பாணன்'**

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# ஒரே ஒரு காசு செலவில் 1 சேலை அல்லது 3 சட்டைகள் பனிபோல் வெண்மை பெற...

# மாக்ஸிம்*

எல்லா துணிகளுக்கும் உகந்த ஏற்றமிகு ஒயிட்னர்

**எவ்வளவோ சிக்கனமானது!**

எந்த ஆடையாக இருந்தாலும் சரி, அதற்குப் புத்தம் புதிய வெண்மை ஒளியேற்ற சராசரி ஒரு துளி மாக்ஸிம் போதும். ஒவ்வொரு மாக்ஸிம் பாட்டிலும் சுமார் 1200 துளிகள் கொண்டது என்பது உங்களுக்குத் தெரியுமோ என்னவோ! எனவேதான் மாக்ஸிம் மிகவும் சிக்கனமான, வீரியமுள்ள நீலநிற திரவ வடிவ ஒயிட்னராக விளங்குகிறது. மேலும் விசேஷ ட்ராப்பர் மூடிகொண்ட பிளாஸ்டிக் பாட்டிலாக இருப்பதால், இன்னும் லாபம். ஏனெனில் தேவைக்கு மேல் ஒரு துளி கூட சிந்தாது. எனவே துளியும் வீணாவதில்லை, துணியும் நீலம் படிவதில்லை.




**எல்லா துணிகளுக்கும் ஏற்றது**

எல்லாவித துணிகளுக்கும் நீங்கள் மாக்ஸிம் உபயோகிக்கலாம். 'டெரீன்', 'டெரீன்'/காட்டன், நைலான், உல்லன், சில்க் மற்றும் காட்டன் போன்ற எல்லா துணிகளுக்கும் மாக்ஸிம் வெண்மையூட்டி புதிய மெருகேற்றுகிறது. தவிர, மாக்ஸிம் துணியில் கறை ஏற்படுத்துவதுமில்லை.

**உபயோக முறை மிகமிக எளிது**

மாக்ஸிம் உபயோக முறை மிகமிக் எளிதானது. துணிகளை முதலில் சோப் அல்லது பிற சலவைச் சாதனங்கள் மூலம் சுத்தமாக துவைத்து நன்றாக அலசி எடுக்கவும். பிறகு வாளியிலுள்ள (5 லிட்டர்) நல்ல தண்ணீரில் 10-15 துளிகள் மாக்ஸிம் விட்டுக் கலக்கவும். (பழுப்பேறிய துணிகளென்றால் கொஞ்சம் கூடுதல் துளிகள் மாக்ஸிம் சேர்க்கவும்) பின்பு துணிகளை 10—15 நிமிடங்களுக்கு அதில் ஊறவைக்கவும். மீண்டும் அலச வேண்டாம். அப்படியே உலரவிடவும்.






ஒவ்வொரு காசுக்கும் உரிய பலனைத் தருகிறது மாக்ஸிம்

*Regd. T.M. Geoffrey Manners & Co., Ltd.

GHM-23 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

